ஸ்ரீதேசபக்தன்

வாரப்பதிப்பு

சுபானு வருஷம் தை மாதம் 17௳ (30-1-'44)

# என் இந்தக் கொடுமை?

எங்கெந்தக் காரியங்களைச் செய்தால் ஜனங்களின் துயரம் அதிகரிக்கும் என்பதை குறித்துத் திட்டம் போட்டுக் கொண்டு அவற்றை ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேற்ற எண்ணங்கொண்டிருப்பதுபோல் அதிகாரிகள் தங்கள் யோசனைகளை வெளியிடுகின்றனர்! இப்போது அவர்கள் மூளையில் விநோதமான ஓர் யோசனை உதித்திருக்கிறது. ரயில் கட்டணங்களை உயர்த்த யோசிக்கிறார்களாம்! எவ்வளவு உயர்த்தப் போகிறார்கள்? 25% முதல் 40% வரை. காரணம் என்ன? செலாவணிப் பெருக்கைக் கட்டுப்படுத்தி, பிரயாணச் சுமையைக் குறைப்பது உத்தேசமாம். நிறைய வண்டிகள் ஓடிக்கொண்டிருக்கும்போதே 3-வது வகுப்புப் பிரயாணிகள் எவ்வளவு சௌகர்யமாக தங்கள் தங்கள் இடங்கள் போய்ச் சேர்ந்திருக்கின்றனர் என்பது தெளிவு! யுத்தம் துவங்கிய சில நாட்களுள் வண்டிப் போக்கு வரத்துக் குறைக்கப்பட்டது; கட்டணங்களும் உயர்ந்தன. இந்த நிலைமையில் ஜனங்கள் உல்லாஸப் பிரயாணம் செய்ய இடமேதேனும் உண்டா? இந்தக் காலத்தில் ரயில் பிரயாணம் செய்வதைவிட சிறையில் கடுங்காவல் தண்டனை அனுபவிப்பது சிறந்தது என்ற எண்ணம் மேலோங்கி நிற்கையில் உல்லாஸப் பிரயாணம் பற்றிப் பேசுவது அடியோடு அபத்தம். அவசியமின்றி யாரும் ரயில் பிரயாணம் செய்வதற்கில்லை. கட்டண உயர்வால் பிரயாணம் செய்வோர் தொகையைக் குறைக்கலாம் என்று எதிர்பார்ப்பது பிரமை. இதர துறைகளில் சொல்லி வரும் அசட்டுச் சமாதானங்களைப் போலத்தான் இதுவும்.

செலாவணிப் பெருக்குக்கு முக்கிய காரணம் சர்க்காரின் விபரீத முறையே காரணம். யுத்தக் கண்டிராக்டுகளில் ஈடுபட்டிருப்போர் வசமே கட்டுக் கட்டாக நோட்டுகள் குவிந்திருப்பது அவர்களுக்குத் தெரியாததல்ல. விலை வாசிகளின் ஏற்றத்தால் பாதிக்கப்பட்டு வருமானத்தில் எவ்வித மாறுதலையும் காணாத 3-வது வகுப்புப் பிரயாணிகளை மேலும் வருத்தக்கூடிய ஒரு கொடிய யோசனை அதிகாரிகளுக்கு உதித்ததுதான் ஆச்சர்யம். விலைவாசிக் கட்டுப்பாடுபற்றி ஓர் புறம் ஆர்ப்பாட்டமாகப் பேசிக்கொண்டு அதே மூச்சில் ரயில் கட்டணங்களை உயர்த்தவேண்டுமென்ற யோசனையையும் வெளியிட்டால் அது கசப்பைப் பெருக்கும் செயலாகவே ஆகும்; நியாயமில்லாத காரியமும் ஆகும்.

எந்தக் காரணத்தைக் கொண்டு பார்த்தாலும் இந்தக்கொடுமையான யோசனைக்கு நேரான சமாதானம் சொல்ல முடியாது. ரயில்வேக்களில் ஏற்கனவே கொள்ளை லாபம் கிடைத்து வருகிறது. சென்ற வருஷம் உபரித் தொகையிலிருந்து 84 கோடி ரூ தேய்வு நிதிக்கும், 10 கோடி ரூ ரிஸர்வ் நிதிக்கும் ஒதுக்கப்பட்டது அனைவரும் அறிந்த விஷயம். எல்லாச் செலவும் போக நடை முதல் வருஷத்தில் 36 கோடி ரூபாய் உபரியாக இருக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. அதாவது, ரயில்வேக்களை உபயோகிப்போரிடமிருந்து நியாயமாக வசூலிக்க வேண்டிய கட்டணம் மட்டும் வசூலிக்கப்படவில்லை; அதிகப்படியாக 36 கோடி ரூபாய் வரியாக வசூலிக்கப்படுகிறது. யுத்தத்திற்குப் பின் பிரயாணிகளது வசதிகளைப் பெருக்க கையிருப்பு நிதி திரட்டப் போவதாக சர்க்கார் சமாதானம் சொல்லுகின்றனர். இதற்குப் பணம் சேர்க்க வழி இதுதானா? லண்டனில் இது வரை 800 கோடி ரூபாய்க்குமேல் ஸ்டர்லிங் ஐவேஜி சேர்ந்திருக்கிறது. யுத்தத்திற்குப் பிறகு அது நமக்கு தேவையான வசதிகளைப் பெருக்கிக் கொள்ள உதவாதா? இதை விட்டு விட்டு யுத்தத்துக்குப் பிறகு வசதி செய்வதற்காக பலவித துன்பங்களில் சிக்கிவாடும் மக்களை மேலும் வருத்துவது கொடுமை. எனவே அதிகாரிகள் தங்கள் விபரீத யோசனையைக் கைவிடுவதுதான் விவேகம்.

# சென்ற வார நிகழ்ச்சிகள்

## செங்கற்பட்டு ஸப் கலெக்டர் கைதி

செங்கற்பட்டு ஸப் கலெக்டர் ஸ்ரீ டி. எஸ். ஸ்வாமிநாதன் ஐ. ஸி. எஸ். செங்கற்பட்டு ஜில்லா போலீஸ் சூப்பரின்டென்டால் செங்கற்பட்டில் கைது செய்யப்பட்டுப் பல்லாவரத்துக்குக் கொண்டுவரப்பட்டார். ஸ்ரீ ஸ்வாமிநாதன் மீது நம்பிக்கை மோசடி (இ. பி. கோ. 409 பிரிவு) குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

ராஜமஹேந்திரத்தில் இவர் ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட்டாக விருந்த காலத்தில் இக்குற்றம் நிகழ்ந்ததாகவும், தஸ்தாவேஜிகளை மாற்றியதாகவும், கூறப்படுகிறது. ராஜமஹேந்திரம் ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட் கோர்ட் குமாஸ்தா ஒருவரும் இது சம்பந்தமாக ஏற்கனவே கைது செய்யப்பட்டிருக்கிறார்.

* * * *

## எல்லா ரயில்களுக்கும் ஒரே கட்டணம்

எம். எஸ். எம். ரெயில்வே, எஸ். ஐ. ரெயில்வே இரண்டையும் இந்தியா சர்க்கார் அடுத்த ஏப்ரல் மாதத்தில் எடுத்துக்கொண்ட பிறகு இரண்டு ரெயில்வேக்களும் ஒன்றாக இணைக்கப்படுமென்று தெரிகிறது. சமீபத்தில் ரயில்வேக் கட்டணங்கள் உயர்த்தப்படுமென்று கூறப்பட்டது. இது சம்பந்தமாக விசாரித்ததில் இப்பொழுது மெயில், எக்ஸ்பிரஸ் வண்டிகளுக்கு ஒரு கட்டணமும் பாஸஞ்சர் வண்டிகளுக்கு ஒரு கட்டணமும் இருப்பதாயும், இவ்விதமில்லாமல் எல்லா ரயில்களுக்கும் ஒரே விதமான கட்டணமாக இருக்கும்படி செய்யப்படுமென்றும் அதாவது பாசஞ்சர் ரயில் கட்டணங்கள் மெயில் ரயில் கட்டணங்களுக்கு உயர்த்தப்படுமென்றும் தெரிகிறது.

நிலக்கரிக் குறைவு காரணமாக ஏப்ரல் மாதம் முதல் ரயில் வண்டிகள் போக்குவரத்தில் குறைவிருக்குமென்றும் கூறப்படுகிறது.

* * * * *

## ஸர் பிரோஸ்கான் நூன்

கனம் ஸர் பிரோஸ்கான் நூனை (கே. ஸி. எஸ். ஐ. கே. ஸி. ஐ. இ.) யுத்த மந்திரி சபையில் இந்தியாவின் பிரதிநிதியாக ராஜப் பிரதிநிதி நியமித்திருக்கிறார். ஸர் நூன், மார்ச் கடைசியில் லண்டனுக்குப் புறப்படலாம். மேற்படி மந்திரி சபையில் சமஸ்தானாதிபதிகளின் பிரதிநிதி ஒருவரைப் பற்றிய அறிக்கை பிறகு வெளிவரும்.

* * * *

## வேவலைச் சந்தித்ததுபற்றி ஸாப்ரூ

"ராஜீய நிலைமையைப்பற்றி வைஸ்ராயுடன் ஏதாவது பேசினீர்களா?" என்று யுனைடெட் பிரஸ் பிரதிநிதி ஸர் டேஜ்பஹதூர் ஸாப்ரூவைக் கேட்டதற்கு அவர் ஒரு வார்த்தைகூடக் கிடையாது என்று உரைத்தார்.

வைஸ்ராயுடன் தாம் சுமார் 40 நிமிஷ நேரம் பேசியதாகவும், இந்தியச் சாரணர் இயக்கம்பற்றியே சம்பாஷணை நடந்ததென்றும் ஸர் ஸாப்ரூ கூறினார்.

* * * *

## சர் ராமஸ்வாமி முதலியார் ஜோஸ்யம்

கான்பூரில் சர் பாதாம்பத் சிங்கானியர் அளித்த விருந்தில் பேசும்பொழுது, இந்திய சர்க்கார், சப்ளை மெம்பர் சர் ஏ. ராமசாமி முதலியார் குறிப்பிட்டதாவது:—

"விவசாயி தொழிற்சாலை தொழிலாளி, சாதாரண மனிதன் ஆகிய மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே புனரமைப்புத் திட்டங்களையொட்டிய இந்திய சர்க்கார் முக்கிய நோக்கமாகும். யுத்தத்திற்குப் பின் இந்தியா, முக்கியமான பாகத்தை வகிக்கும் என்று நான் நம்புகிறேன்.

யுத்தத்தற்குபின் நியாயமான காலத்திற்குள், நாம் பெருமையடையக்கூடிய அரசியலமைப்பு இந்தியாவிற்குக் கிடைத்துவிடும். சென்ற காலத்தில் எவ்வளவு வேற்றுமையிருந்தபோதிலும் தற்போது யுவஜன சமூகம் பழைய கோஷங்களையும் தலைவர்களையும் ஒதுக்கிவிட்டு வருங்காலத்திற்கு ஊக்கத்துடன் உழைக்குமென்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

இந்தியாவின் யுத்த முயற்சியில் இந்திய, ஐரோப்பிய கைத்தொழில் முதலாளிகள் பெரும் சேவை செய்துள்ளனர்.

வருங்காலத்தில் விவசாயத்தையும் கைத்தொழிலையும் பெருக்க விசேஷ வசதியுள்ளது. இந்தியாவின் விசேஷ இயற்கை வளத்தையும் மின்சார சக்தியையும், சரியான முறையில் பயன்படுத்துவதிலேயே இப்பிரச்னையைத் தீர்ப்பதற்குரிய வழியிருக்கிறது.

இருபது லட்சம் இந்தியர், இந்தியாவிற்கு வெளியில் பலவிடங்களில் நேசதேசப் படைகளுடன் சேர்ந்து போராடி வருகின்றனரென்பதில் இந்தியா நியாயமாகப் பெருமையடையலாம். அவர்கள் தீரமும், அரிய திறமையும், சிறந்த தளகர்த்தரான லார்டு வேவலாலேயே லண்டனில் போற்றப்படுகிறது.

# போர் போகும் போக்கு

## இத்தாலி மீது புதிய படையெடுப்பு

இத்தாலியின் மேற்குக்கரையில் இன்னொரு இடத்தில் நேசக்கட்சியினர் ஏராளமான துருப்புகளை இறக்கியிருக்கிறார்கள். அந்த ஸ்தலம் ரோமுக்கு சுமார் 30 மைல் தெற்கே இருக்கிறது. ஏற்கனவே அப்படைகள் நெட்டுனே என்ற துறைமுகத்தைக்கைப்பற்றிவிட்டன. இப்போது அவை அதற்கு வடக்கேயுள்ள ஆன்ஸிலோ என்ற துறைமுகத்தையும் கைப்பற்றிவிட்டதாகத் தெரிகிறது. முன்னணிக்காவல் துருப்புகள் கடற்கரையிலிருந்து சுமார் 12 மைல் தூரம் கிழக்கே சென்றிருக்கின்றன. அவ்வழியாக ரோமுக்கு செல்லும் ரயில் பாதையையும், ரஸ்தாவையும் இப்போது எதிரிகள் உபயோகிப்பதற்கில்லை. இன்னும் அப்பகுதியில் ஜெர்மனியர் தீவிரமாக எதிர்க்க கிளம்பவில்லை. எனினும் அங்கு மிகக் கடுமையான போர் நடக்குமென்று மத்திய தரைக்கடல் பிரதேசத்தின் நேச சேனாதிபதியான ஜெனரல் வில்ஸன் எதிர்பார்க்கிறார். ஏற்கனவே தென் பகுதியில் நடக்கும் போராட்டம் இப்போது மும்மரமாயிருக்கிறது. வடக்கே நேசக் கட்சியினர் பலம் ஓங்கிவிடுமாயின், தெற்கிலுள்ள ஜெர்மனியரின் சப்ளை பாதைகள் துண்டிக்கப்பட்டுவிடும். அங்கிலேயில் அவர்கள் உயிர் தப்ப துரிதமாகப் பின்வாங்குவதைத் தவிர வேறு வழியில்லை. இதற்குள்ளேயே ரோம்-காஸினோ ரயில் பாதை துண்டிக்கப்பட்டு விட்டதாக ஒரு செய்தி கூறுகிறது.

## மேலும் ரஷ்ய வெற்றி

லெனின் கிராட் அரங்கத்தில் ரஷ்யர் மேலும் துரிதமாக முன்னேறிக்கொண்டிருக்கின்றனர். ஜெர்மனியர் தப்பியோடுவதற்கான மார்க்கங்கள் துண்டிக்கப்பட்டு வருகின்றன. லெனின் கிராடுக்குத் தெற்கேயும், இல்மன் ஏரிக்கு வடக்கேயும் ரஷ்ய முன்னேற்றத்தைத் தடுக்க எதிரிகள்செய்த முயற்சி இதுவரை பலிக்கவில்லை. இதே சமயத்தில் கிரிமியாவிலும் எதிரிகளின் நிலை சங்கடமானதாகி வருகிறது. நீபர் நதியின் வளைவிலும் ரஷ்யர் தீவிரமான தாக்குதல் துவக்கியிருக்கின்றனர்.

* * * *

## 'கஷ்டமான காலம் இனித்தான்'

அமெரிக்காவின் 4-வது யுத்தக் கடன் திட்டத்தை ஆதரிக்கும்படி மக்களுக்கு விடுத்த வேண்டுகோளில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் குறிப்பிட்டிருப்பதாவது:—பர்லினையும், டோக்கியோவையும் பிடிக்காதவரை நாம் ஒரு க்ஷணம்கூட யுத்தம் தீர்ந்துவிட்டதாக இன்பக் கனவு காணமுடியாது. மிக்க கஷ்டமான போர் நடவடிக்கைகள் இனித்தான் துவங்க இருக்கின்றன. அவற்றை நாம் கடந்துவிடவில்லை.

* * * *

## பெர்லினில் பாதி அழிந்ததாம்

கொலம்பியா ரேடியோ யுத்த விமர்சகர் பெர்லினிலிருந்து அடித்திருக்கும் தந்தியில் நவம்பர் முதல் பெர்லின்மீது நேச விமானத் தாக்குதலால் ஏற்பட்டசேதத்திற்கு சரித்திரத்திலேயே நிகர் இல்லை என்று எழுதியுள்ளார்.

வார்ஸா, ராட்டர்டாம், கவிண்ட்ரி, ஸ்டாலின்கிராட் முதலிய இடங்களில் நடந்ததைக் காட்டிலும் இந்த நாசம் அதிகம் என்றும், நகரில் சுமார் 30 முதல் 50 சத விகிதத்திற்கு நாச மாக்கப்பட்டதாகவும் பிரயாணிகள் அறிவிப்பதாக அவ் விமர்சகர் தெரிவித்துள்ளார்.

* * * *

## "அச்சுத் தோல்வி சமீபத்தில் இல்லை"

பிரிட்டிஷ் மந்திரி ஸர் ஆர்ச்சிபால்ட் ஸிங்க்ளேர் செய்த பிரசங்கமொன்றில், தாங்கள் ஜெர்மனியர் படும் கஷ்டங்களைக்கண்டு சந்தோஷப்படவில்லை என்றும், ஆனால் ஹிட்லரும், கோயரிங்கும் பிரிட்டிஷ் நஷ்டத்தைக்கண்டு மகிழ்ச்சியுற்றதை மறக்கவில்லை என்றும், பொது மக்களைத் தாக்கத் தாங்கள் விரும்பவில்லை என்றும் ஜெர்மன் யுத்த முயற்சியை கெடுப்பதே தம் நோக்கம் என்றும் கூறினார். ஜெர்மனியையும், ஜப்பானையும் முறியடிக்க அதிக கால தாமதமேற்படும் என்றும் அவர் சொன்னார்.

* * * *

## "பொதுஜன ஐரோப்பா"

ரஷ்யா விரும்பும் "பொதுஜன ஐரோப்பா" எவ்விதம் அமைக்கப்படவேண்டும் என்பது ஒரு மாஸ்கோ பத்திரிகையில் விவரிக்கப்பட்டிருக்கிறது. 1. போலந்தில் ஜெர்மனியர் செய்த வசதிகளைப் பறித்துவிடவேண்டும். 2. நிலம் நியாயமாக பிரித்துத் தரப்படவேண்டும். 3. அந்தந்த தேசத்தை அதன் பூர்வீக சொந்தக்காரர்களுக்கே ஒப்படைக்கவேண்டும். 4. மைனாரிட்டியாகவுள்ள மக்கள் மாற்றி வைக்கப்படவேண்டும்.

பொதுஜனப் பிரதிநிதிகளைக் கொண்ட ஸர்க்கார்களுடன் மட்டுமே உறவுகொள்ள ரஷ்யா விரும்புகிறது: ஆகவே தற்போது லண்டனில் இருக்கும் போலிஷ் ஸர்க்காரை ஜன சம்மதி பெற்றதாக ரஷ்யா கருதவில்லையாம். வார்ஸாவை செம்படை நெருங்கியதற்கப்புறம் புதிய போலிஷ் ஸர்க்கார்

ஒன்று போலந்தில் ரஷ்யாவினுல் நிறுவப்படலாம். கிரேக்க, யுகோஸ்லாவ் சர்க்கார்களும் இதே சங்கட நிலைமையில் இருக்கின்றன.

* * * * *

## நான்கிங் பிரதம மந்திரியைக் கொல்ல முயற்சி

ஜெர்மன் ஆதிக்கத்திற்குட்பட்ட விச்சி ரேடியோ தெரிவித்ததாவது:-நான்கிங் சர்க்காரின் பிரதம மந்திரியான வாங் சிங் வீயைக் கொல்ல முயற்சித்த 6 பேர்கள் கைது செய்யப்பட்டு தூக்கிலிடப்பட்டனர்.

* * * *

## பொலீவிய சர்க்காருக்கு அங்கீகார மறுப்பு

புதிய பொலீவிய சர்க்காருக்கு யுனைடெட் ஸ்டேட்ஸும் பிரிட்டனும் அங்கீகாரமளிக்க மறுத்துவிட்டதாக உத்தியோக முறையில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. பொலீவியாவிலுள்ள அமெரிக்க தூதர் யுனைடெட் ஸ்டேட்ஸுக்கு திரும்பும்படி அறிவிக்கப்பட்டிருக்கிறார்.

* * * *

## ஜெர்மன் தூதர்-ஜப்பானிய மந்திரி பேட்டி

ஜப்பானிய நியூஸ் ஏஜென்ஸி தெரிவிப்பதாவது:—டோக்கியோவிலுள்ள ஜெர்மன் தூதரான எச். ஸ்டாமர் உலக நிலைமைபற்றி ஜப்பானிய அந்நிய மந்திரி ஷிகிமிட்ஸுடன் ஒரு மணி நேரம் சம்பாஷித்தார்.

* * * *

## அர்ஜண்டினுவில் போய்த் தங்க ஹிட்லர் ஏற்பாடு?

அவசியமேற்பட்டவுடன் அர்ஜண்டினுவிற்குள் போய்த் தங்க ஹிட்லர் ஏற்பாடு செய்திருப்பதாக அமெரிக்க சர்க்காருக்குத் தகவல் கிடைத்திருக்கிறது என்று ஒரு நிருபர் எழுதுகிறார். இச் செய்தியையும், அர்ஜண்டினுவில் நாஸிகளே புரட்சியை எழுப்பியிருப்பதாக அமெரிக்கப் பத்திரிகை யொன்றில் வெளியான செய்தியையும் தாம் நம்பவில்லை என அமெரிக்க மந்திரி மிஸ்டர் கார்டல் ஹல அறிவித்தார்.

* * * * *

## சோபியா நகரம் காலி

பல்கேரியாவிலிருந்து துருக்கிக்கு வந்த தகவல் கூறுவதாவது:—சோபியாவிலிருந்து 3 லக்ஷம் பேர் வெளியேற்றப்பட்டுவிட்டனர். துருக்கி தூதர் கார்யாலயமுட்பட எல்லா தூதர் கார்யாலயங்களும் சோபியாவுக்குத் தென்கிழக்கே 43 மைல் தூரத்திலுள்ள ஆரோக்கிய ஸ்தலமான சம்கோரியாவுக்கு மாற்றப்பட்டுவிட்டன. பத்திரிகை ஆபீஸுகளும் தலைநகரிலிருந்து வெளியூர்களுக்கு மாற்றப்பட்டுவிட்டன.

* * * *

## நாஸி உளவாளி கைது

ட்ரினிடாடிலுள்ள அர்ஜண்டைன் தூதரான ஆல்மர் ஹெல்பட் என்பவர் ட்ரினிடாடில் கைது செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. அவர் தாம் நாஸி உளவாளி என்பதை ஒப்புக்கொண்டார்.

அர்ஜண்டைன் ஸர்க்கார் வெளியிட்ட அறிக்கையில் அவர் அந்த ஸர்க்காரின் ராஜதந்திர இலாகாவிலிருந்து நீக்கப்பட்டதாக கூறப்பட்டிருக்கிறது.

* * * *

## தென் பஸிபிக் தீவுகளின் எதிர்கால நிலை

அமெரிக்காவில் இருக்கும் நியூஸிலந்து மந்திரி மிஸ்டர் வால்டர் நாஷ் வெளிநாட்டுக் கொள்கை சங்கக்கூட்டத்தில் பேசினர்.

யுத்தத்திற்கப்புறம் தென் பஸிபிக் பிரதேசத்தை மேற்பார்வையிட ஒரு ஸ்தாபனம் வேண்டும் என்றும், பொதுவான சமூக, பொருளாதார, ராஜீயக்கொள்கைகளை இது மேற்கொள்ள வேண்டும் என்றும் அவர் கூறினர்.

யுத்தத்திற்கு முன்பு எந்த நாடுகள் அந்தத் தீவுகள் மீது அதிகாரம் வகித்தனவோ அவையே இந்த ஸ்தாபனத்தை நிறுவுவதில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் சுதேசிகளுக்கும் நிர்வாகத்தில் பங்கு தரப்பட்டு சுயவாட்சிக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

## மஹாத்மாஜி எழுதிய நூலுக்குத் தடை

"ஒவ்வொரு பிரிட்டிஷாருக்கும்" என்ற மகுடத்துடன் வெளியிடப்பட்டிருக்கும் காந்திஜியின் சிறிய புத்தகத்தைத் தென் ஆப்ரிகாவில் விற்கக் கூடாதென அந்நாட்டு அதிகாரிகள் தடுத்து விட்டனர்.

## ஸர் ஜேம்ஸ் கிரிக் இந்தியா மந்திரியாகலாம்

இந்தியா மந்திரியும், யுத்த மந்திரியும் மாற்றப்படுவர் என்ற வதந்தி மறுபடியும் லண்டனில் தலைகாட்டியிருப்பதாக 'டெய்லி ஸ்கெட்ச்' அரசியல்நிருபர் எழுதுகிறார். இந்தியா மந்திரி பதவி ஸர் ஜேம்ஸ் கிரிக்குக்குத் தரப்படும் என்றும், பீவர்ப்ருக் பிரபு அவருக்குப் பதிலாக யுத்த மந்திரி ஸ்தானத்தை பெறுவார் என் என்றும், அந்த நிருபர் எழுதியுள்ளார்.



வைஸ்ராய் பிஹார், அஸ்ஸாம், பிரயாணத்தின் போது ஒரு நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்வையிட்டார்.

# ஸ்ரீ ஸத்யமூர்த்தியின் கடிதங்கள்



## புத்தகங்கள்



ஸ்ரீமான் எஸ். ஸத்தியமூர்த்தி 1941-ம் வருஷம் ஜூன் மாதம் 9-ந் தேதியன்று தமது பெண்ணுக்குப் புத்தகங்கள் படித்தல் பற்றி ஆங்கிலத்தில் ஓர் கடிதம் எழுதினார். அக் கடிதத்தின் மொழி பெயர்ப்பு கீழே வெளியிடப்பட்டுளது. அறிவு வளர்ச்சிக்கு எந்தப் புத்தகங்களைப் படிக்க வேண்டுமென்பதற்கு அவர் சில குறிப்புகளை ஸ்ரீமதி லக்ஷ்மிக்குத் தெரிவித்திருக்கிறார்.

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

உனக்கு புஸ்தகங்கள் என்றால் ரொம்பப் பிடிக்கிறது. இது என்னுடைய அபிப்பிராயம். உன் அம்மா அபிப்பிராயமும் அதுவேதான். புஸ்தகங்களைப் படிப்பதற்கு உனக்கு ஆசை இருக்க வேண்டியது நியாயம்தான். பல விஷயங்களைப் பற்றி அதிகமாக தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை புத்தி வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் அஸ்திவாரம்போலவாகும். நீ குழந்தை; எனவே கதைப் புஸ்தகங்கள், நாவல்கள், யாத்திரையைப்பற்றிய புஸ்தகங்கள், இவற்றையெல்லாம் படிக்க வேண்டும் என்று உனக்கு விருப்பம் இருப்பது இயற்கை. இன்னும் பலர் இப்படித்தான். ஆனால் கூடிய சீக்கிரம் நீ இதை விட்டுவிடவேண்டும். சரித்திரம், பூகோள சாஸ்திரம், இயற்கை விக்ஞானம் அதாவது மலர்கள், பறவைகள், மிருகங்கள், விக்ஞானம் மனோ தர்ம சாஸ்திரம், மதம், முதலியவைகளை பற்றிய புஸ்தகங்களை யெல்லாம் படித்தறியவேண்டும். நன்கு படித்த ஸ்திரீயாக விளங்கவேண்டும் என்பது உனது லக்ஷியமாகவிருக்கட்டும். நான் மேலே சொன்ன விஷயங்களைப்பற்றி யெல்லாம் படித்து நீ நிபுணத்வத்தை அடைவது என்பது சாத்தியமில்லை. அதற்கு அவசியமும் கிடையாது. இந்தப் பொதுவான விஷயங்களைப்பற்றி யெல்லாம் பூர்வாங்கமாகப் படித்து பரிசீலனை செய்து வைத்துக் கொண்டால் போதும். இதனால், நீ பத்திரிகைகளையும் மற்றைய சஞ்சிகைகளையும் படிக்கும்போது அவற்றை புத்திசாலித்தனத்துடனும், சிரத்தையுடனும் பின்பற்ற முடியும்.

பொது அறிவு என்ற புத்தகப் பிரதி ஒன்று உனக்கு வேண்டும் என்று நீ விரும்புகிறாய். ஆம். உன்னிடம் அப்புத்தகம் இருக்க வேண்டியதுதான். யுத்தம் முடிந்த பிறகு தற்கால நிகழ்ச்சிவரையில் சேர்த்து ஓர் புஸ்தகம் பிரசுரம் ஆகுமென நம்புகின்றேன். அந்தப் பிரதி உனக்கு கிடைக்கும். இந்தப் புத்தகப் பிரதியெல்லாம் நீ படிக்க முடியாது என்பது வாஸ்தவம்தான். ஆனால் அவ்வப்போது அப்புத்தகங்களை நீ அடிக்கடி புரட்டிப் படித்து உனது ஞானத்தைப் பெருக்கிக்கொள்ளலாம். அது உனக்குப் பயன் தரத்தக்கதாகவிருக்கும்.

இந்தப்பொதுவான அறிவு வளர்ச்சி ஒருபுறமிருக்கட்டும். சரித்திரம்,மனோ

தத்துவர், இயற்கை விக்ஞானம், இவற்றில் நீ விசேஷ அபிமானம் கொண்டு நீ அதிக சிரத்தையோடு படிப்பாய். அந்தமாதிரி சந்தர்ப்பங்கள் ஏற்படின், அவ்விஷயங்களைப்பற்றிய புத்தகங்களை நீ தீவிரமாகப் படிக்க வேண்டும். பார்க்கப் போனால் அவ்விஷயங்களில் உனக்குள்ள சிரத்தை படிக்கவே தூண்டும். அதுபோன்ற படிப்பு குறிப்பான விஷயத்தில் உனக்கு விசேஷ பரிச்சயத்தை ஏற்படுத்தித் தருவதுடன பொதுவாக உன்னை நல்ல படிப்பாளியாகவும் செய்துவிடும்.

இது தவிர, ஆங்கிலம், தமிழ், ஸமஸ்கிருதம், ஆகியவற்றில் உள்ள உயர்தர புத்தகங்களைப் படிப்பதிலும் ருசி பிறக்கும்படி நீ செய்து கொள்ள வேண்டும். ஏற்கனவேயே இப்பழக்கத்தை நீ அபிவிருத்தி செய்துகொண்டுதான் வருகிறாய். நீ படிக்கும் புத்தகங்களைப்பற்றியெல்லாம் என்ன நினைக்கின்றாயோ எனக்குத் தெரியாது. சாதாரணமான, தற்கால நாவல்கள் எனக்கு போதும் போதுமென்று ஆகிவிட்டன. இது பகிரங்கமாகக் கூறிவிடுகிறேன். சாதாரணமாக அவை குற்றங்கள் அல்லது ஆடவர் பெண்டிர் இவர்களைப்பற்றியே விவரங்கள் தாங்கி வெளிவருகின்றன. இவை என்னைச் சலித்துப்போகச் செய்கின்றன. ரயில்களிலும் அல்லது வேறு வேலை ஒன்றையும் செய்ய முடியாதுபோகும் சந்தர்ப்பங்களிலும் பொழுது போக்கும் போதினிலும், மூளைக்கு சிரமத்தை யளிக்காமல் இருக்கவேண்டுமானால் அந்தப் புத்தகங்களை நீ படிக்கலாம். ஆனால் அப்புத்தகங்கள் உனது புத்தியை ஊக்கமுறும்படி செய்யவோ உள்ளூரவிருக்கும் உணர்ச்சியை எழுப்பவோ போதாது.

ஆங்கிலப்புத்தகங்கள் சம்பந்தப்பட்டவரை ஷேக்ஸ்பியர் எழுதியுள்ள நாடகங்கள் அனைத்தையும் நீ படிக்க வேண்டுமென்பது என் விருப்பம். அவை பெரிய இலக்கியமாகும். அவற்றில் சில திரும்பத் திரும்ப உற்சாகத்தோடும் ஊக்கத்தோடும் உனக்குப் படிக்கத் தோன்றும். அடுத்தபடியாக மில்டன், வேர்ட்ஸ்ஒர்த், டென்னிஸன், ஷெல்லி, கீட்ஸ் இவர்கள் எழுதிய காவியங்களை நீ படிக்க வேண்டும். கோல்ட்ஸ்மித், ஸ்காட், டிக்கன்ஸ், தாக்கரே, மிஸஸ் ஹென்றிஉட் இவர்கள் எழுதிய புத்தகங்களில் எவ்வளவு அதிகமாக நீ படிக்க முடியுமோ அவ்வளவையும் நீ படிக்க வேண்டும் என்பது என் ஆசை. இவர்கள் தவிர இன்னும் பல எழுத்தாளர்களும் உண்டு. அவர்களது புத்தகங்களையும் நீ படிக்கலாம். மேலே சொன்ன நூல்களையெல்லாம் படித்தால் ஆங்கில இலக்கியத்தின் பெருமை, அதிலுள்ள இனிமை இவற்றைப்பற்றி நீ கொஞ்சம் தெரிந்து கொண்டதாக விருக்கும்.

இதை எவ்வாறு சமாளிப்பாயோ எனக்கு தெரியாது. அல்லது உனக்காக நான் அதை எப்படி சமாளிக்கும்படி செய்யப்போகிறேனோ அதுவும் தெரியாது. ஆனால், வால்மீகி, காளிதாஸர், புவபூதி இவர்களது நூல்களையெல்லாம் படித்து ஆனந்திக்கப்போதிய சம்ஸ்கிருத ஞானம் உனக்குக்கிட்டும்படி நீசெய்துகொள்ளவேண்டும். ராமாயணம், சாகுந்தலம், உத்தரராம சரித்திரம் இவற்றையெல்லாம் படித்து அனுபவிப்பது நம் வாழ்க்கையில் கிட்டும் மகத்தான பாக்கியம். நியாயத்திற்கும் ஆத்ம உணர்ச்சிப் பெருக்குக்கும் அவை ஓர் விருந்து. அவற்றை நீ அனுபவிப்பாய் என்று எனக்குத் தெரியும். இன்னும் அதிகமான இலக்கிய இரத்தினங்களை உன்னோடும் உனது தாயின் கூடவும் சேர்ந்தாற்போல கூடிய சீக்கிரம் படித்து ஆனந்திக்கும் நாளை நான் எதிர்பார்க்கிறேன். கம்ப ராமாயணத்தை அனுபவிக்கும் அளவிற்கு நீ தமிழ் பாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ள வேண்டும். பி. ஆர். ராஜம் ஐயர் எழுதிய கமலாம்பாள் சரிதை, எ. மாதவய்யா எழுதிய பத்மாவதி சரித்திரம் இவற்றையும் நீ படிக்கவேண்டும். அவை அற்புதமான நாவல்கள். தற்கால தமிழ் நாவல்களைப்பற்றி நான் லக்ஷியம் செய்யவில்லை. ஆங்கிலத்தில் உள்ள சிலவற்றைப் போலவே அவை மட்டமாக விருக்கின்றன. ஆனால் நான் மேலே சொன்ன நாவல் இரண்டும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. ஏற்கனவே நான் எழுதியதைப்போல நீ சில தற்கால தமிழ் சஞ்சிகைகளையும் சரிவரப் படிக்கவேண்டும்.

துளஸிதாஸ் ராமாயணத்தைப் பின்பற்றி அனுபவிக்க வசதியாக இன்னும் கொஞ்சம் உனக்கு ஹிந்துஸ்தானி பயில அவகாசமும் சந்தர்ப்பமும் கிடைக்குமென நம்புகின்றேன்.

சரி, உன் வாழ்நாளுக்கே படிக்க வேண்டியவை எவை என்பதற்கு நான் ஓர் திட்டம் போட்டு விட்டேன். வாழ் நாள் எல்லாம் நாம் மாணவராகவிருக்க வேண்டும். இதை விட நான் உனக்குக் கடுமையாக ஓர் வேலை திட்டத்தை ஏன் கொடுக்கக் கூடாது? நீ ஏன் ஓரிரு புத்தகங்களை எழுதலாகாது? எனது ஆசை இம்மாதிரியிருக்கிறது. அதை நான் பூர்த்தி செய்வது சாத்தியமாகவே இருக்கும் என்பது எனது நம்பிக்கை. உனக்கு இவ்வாசையிருக்குமானால் உனக்கு வெற்றி கிடைக்கும். ஏனெனில், உனக்கு சின்ன வயது. எப்படிவிருப்பினும் உனக்குப் புத்தகங்களில் ஆசையிருப்பது பெரிய விசேஷம். அதை விட்டுவிடாதே. ஆனால் ஒன்று. உனக்கு வேண்டிய புத்தகங்களைப் பொறுக்கிக் கொள். அவற்றைப் படித்து உன் அறிவை மென்மேலும் பெருக்கிக் கொள். கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக!

சீனி. ஸ்ரீநிவாஸ சாஸ்திரி

# 'இப்படி நடக்குமானல்..!'

கௌசிகன்

கிட்டுவுக்குப் பரீட்சை தேற வில்லை என்ற செய்தி கேட்ட வுடன், அவன் தகப்பனுர் அடைந்த ஆத்திரத்துக்கு ஒரு எல்லையே இல்லை. கிட்டுவைக் கண்டபடி திட்டினுர். "இந்தக் காலத்துப் பசங்களுக்கே மூளை கிடையாது. அந்தக் காலத்தில் எங்க அப்பா என்னை படிக்க வைக்கவில்லை......இப்போது மட்டுந்தான் என்ன? நாங்கள் படிக்கணும் என்று ஆரம் பித்தோமானுல் நீங்களெல் லாம் மாடு மேய்க்க வேண் டியது தான்! மாதா மாதம் அதுக்குப் பணம்! இதுக்குப் பணம் என்று கேட்கத் தெரி கிறதே ஒழிய மூளை அடியோடு கிடையாது!" என்று பெரிய பிரசங்கம் செய்தார்.

கிட்டுவுக்கு அழுகை அழுகை யாக வந்தது. அவன் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் இந்த வருஷமும் தவறிவிட்டான். அதற்கு அவன் என்ன செய் வான்? கிராமத்தை விட்டு திருச்சி சென்று படித்தான். அப்பாவிடமிருந்து மாதா மாதம் பணம் வந்து கொண் டிருந்தது உண்மை தான். அவ னும் மண்டையை உடைத்துக் கொண்டு தான் படித்தான். அந்தப் பாழாப் போன இங் கிலீஷ் வந்தால் தானே! கிட்டு வுக்கு அப்பா பேரில் கோபம் வந்தது. இவர் என்னமோ படிச்சு கிழிச்சுப்புடரேன் என் கிருரே! "இங்கிலீஷ், ஆப்ஷ னல், (இஷ்டபாடம்) அந்த அல்ஜீப்ரா இவைகளைக் கண் டாலே அப்பா ஓடியே வந் துடுவார்! அதோடு இங்கிலீஷ் ஹிஸ்டரி, இண்டியன் ஹிஸ்டரி, ஜியாகிரபி இம்மூன் றையும் ஒரு நாளில் பரீட்சை எழுத வேண்டுமானுல்—ஒவ் வொன்றிலும் சுமார் 200 பக் கங்கள்—"

இப்படிச் சிந்தனை செய்த வாறே அப்பா அம்மாவின் ஆசிர்வாதத்தையும் கேட்ட வாறு படுக்கையில் கண்ணை இறுகமூடிக்கொண்டுபடுத்திருந் தான் கிட்டு. இப்போது அவன் மனம் அப்பாவும் அம்மாவும் படிக்கச் சென்றிருப்பதாகவும் தான் கிராமத்தில் வீட்டையும் நிலபுலன்களையும் கவனித்துக் கொண்டிருப்பதாயும் கற்பனை செய்து கொண்டிருந்தது. அப்பாவிடமிருந்து இம்மாதிரி கடிதங்கள் வருகின்றன. அந் தக் கற்பனைக் கடிதப் போக்கு வரத்தின் விவரம்:—

15-6-40
திருச்சி,

கிட்டுவுக்கு

கிட்டுவுக்கு அப்பா எழுதிக் கொண்டது என்னவென்ருல் உனக்கு ஆசிர்வாதம்! க்ஷேமம். க்ஷேமத்துக்கு எழுதவும். உனக்குப்போனவாரம் ஒரு கடி தம் போட்டேன். இதுவரை பதில் இல்லை. எனக்கு உடனே பணம் வேண்டும். பிளேடு வாங்கக் கூட கையில் காசு இல்லை. தாடி வளர்ந்துவிட் டது. மற்றவர்கள் எல்லாம் 'ஜோராக ஷேவிங்' பண்ணிக் கொண்டு போகும்போது நான் மட்டும் இப்படிப் போனுல் நன்ருயிருக்குமா? இன்னும் எவ் வளவோ! உடனே பணமனுப்பு. இங்கு என்னமோ பட்டணம் பொடி ஆபீஸர் 'ஸ்நப்' என் றெல்லாம் விற்கிருர்கள். என் ருலும் நம்ப பொன்னுசாமிக் கடைப் பொடியின் ஜோர் இல்லை! ஆகையால் பொன்னு சாமிக்கடையில் ஒரு வீசை யாவது பொடி வாங்கி அனுப்பு. அம்மா சௌக்கியம். அவளுக்கு என்னென்னமோல்லாம் சொல் லித்தராளாம். பெருமை தாங்க வில்லை அவளுக்கு!

அப்பா

20—6—40
"..............."

அப்பாவுக்கு

உங்கள் கடிதம் கிடைத்தது. உங்கள் கையெழுத்து இன்னும் படியவில்லை. அதோடு கடிதம் எழுதும் விதமே உங்களுக்கு தெரியவில்லை. உங்க வாத்தியார் கடிதம் எழுத சொல்லித்தந்தாரா இல்லையா? "அப்பா எழுதிக்கொண்டது என்னவென்ருல்" என்று எழுதி இருக்கிறீர்களே. அந்த நடை நன்ருயில்லை. அதோடு "கையில் கொடுப்பது" என்று கவரின் மேலே விலாசம் எழுதி இருக்கிறீர்கள். பின்னே கையில் கொடுக்காமல் காலிலா கொடுப்பான். இனி இம்மாதிரி கடிதங்கள் எழுதினுல் பணம் அனுப்பமாட்டேன். போன வாரம் உங்க வாத்தியார் 'பிரா கரஸ்' ரிபோர்ட் அனுப்பி இருந்தார் அதில் ஜியாகரபியி லும் 'ஹிஸ்டரியிலும்' ரொம்ப 'டல்' நீங்கள் நல்ல மார்க் வாங்கினுல் தான் பொன்னன் கடை பொடி கிடைக்கும். நீங் கள் அதிக செலவு செய்கிறீர் களாம்; அம்மா எழுதி இருந் தாள். இம்மாதம் 5 ரூ. அதிகம் வேணுமென்று எழுதி இருக் கிறீர்களே காரணம் சொல்ல வும்.

'கிட்டு'

* * * *

13—10—40
திருச்சி

கிட்டுவுக்கு

".........நீ சொன்னபடி ஒழுங்காகத்தான் படிக்கிறேன். நான் சினிமா போவதே இல்லை. ஏதோ பையன்கள் 'ஓசியில்' கூட் டிக் கொண்டு போனுல் ஆங் கிலப்படம் மட்டும் பார்ப்பேன். அம்மா சொல்வதை நீ நம்பவே நம்பாதே! நான் ரொம்ப கஷ்டப்பட்டு 'ஹிஸ்டரியும்' 'ஜியாகரபியும்' படிக்கிறேன். இப்போது எனக்கு 'டான் யூப்' எதன் தலைநகர் என்று தெரியும். பிஸிஸிபி, மிஸெ ஸரி முதலிய மலைகளைப் பற்றி பக்கம் பக்கமாக எழுது

வேன்! இங்கிலீஷ் ஹிஸ்டரியில் எட்டாம் ஹென்றிக்கு எத்தனை மனைவி என்பது கறததலைப் பாடம்! இந்த இங்கிலீஷ் காரன்கள் ஏன் இப்படி விய வஸ்தை கெட்டவன்களா இருக்கான்கள்...'' வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கோ. பட்டாமணியம் வரி கேட்க வந்தால் அப்பா பள்ளிக்கூடத்துக்கு போயிருக்கிருர் வந்து ஏற்பாடு செய்வார் என்று சொல். அம்மாவுக்கு நலங்கும் ஊஞ்சலும் சொல்லித்தராளாம். உடனே மூக்குப் பொடியும் பணமும் அனுப்பு.

'அப்பா'

* * * *

4—11—41

''..............''

அப்பாவுக்கு

''......நீங்கள் ஜியாகரபியில் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறீர்கள் என்பது நன்ருகத் தெரிகிறது. டான்யூப் தலைநகரா?...... பிஸிஸிபி, மிஸெளரி மலைபா? ரொம்ப நன்னுப்படிச்சிருக்கிகேளே! இந்தவருஷம் நீங்ககோட்தான்! இன்னெருபிராகரஸ் ரிபோர்ட் வந்தது. உங்களுக்கு அல்ஜீப்ரா தெரியவில்லையாம். அதோட நீங்க மத்த பையன்களை அல்ஜீப்ரா இஸ்சிப்ரா விச்மேக் பாய்ஸ் காப்ரா' இன்னெல்லாம் கலாட்டா பண்றேளாம். தமிழ் கிளாசிலே அரட்டை அடிக்கிறேளாம். பட்டாமணியம் வரிக்குத் தொந்திரவு செய்ருன். ஆகவே என்ன செய்வது உடனே பதில்.

குறிப்பு:—பணம் தாமதமாகத்தான் அனுப்ப முடியும்.

'கிட்டு'

* * * *

29—1—41

திருச்சி

கிட்டுவுக்கு

அவனுக்கு நிலத்தை யாரிடமாவது வித்துப் பணம் கொடு. எனக்கு உடனே இந்தக் கடித்தை தந்தியாகப் பாவித்துப் பண மனுப்பு. மூக்குப் பொடி மறந்து விடாதே. அதோடு ஆத்தில் பலகா மச்சிலே என் விபூதி 'சம்புடம்' இருக்கு. அதையும் எடுத்து அனுப்பு. இன்று ஹாக்கி விளையாடியதில் முழங்காலில் அடி. நடக்கமுடியவில்லை, இந்த விளையாட்டுக்களெல்லாம் எதற்கு? உடனே பணமும் மூக்குப் பொடியும் மடிசஞ்சியோடு விபூதி சம்புடத்தையும் அனுப்பு.

'அப்பா'

* * * * *

7—2—41

அப்பாவுக்கு

''...உங்களுக்கு இனி பொடி அனுப்பப்போவதில்லை. நீங்கள் வகுப்பில் பொடி போட்டுக் கொள்கிறீர்களாம். அதற்காக வாத்தியார் உங்களை பெஞ்சிமேலே நிக்க வைத்தாராமே. ஒழுங்காகப் படியுங்கள். அம்மா உங்களைப்பத்தி ரொம்ப புகார் எல்லாம் சொல்லி எழுதரா. வகுப்பிலேயே நீங்கதான் அரட்டைக் கல்வியாம். உங்களுக்கு ஸெலக்ஷன் கிடைத்ததே அதிர்ஷடந்தானும். இங்கிலீஷில் 28 மார்க். நன்ருக உழையுங்கள். பப்ளிக் எக்ஸாமினுஷன் வந்துடுத்து. ஜாக்கிரதை.

'கிட்டு'

* * * * * *

20—2—41

கிட்டுவுக்கு

அம்மா சொல்வதை நீ நம்பாதே, நான் பேசுவதே இல்லை. அம்மா தான் அவள் வகுப்பில் சள சள வென்று பேசிக் கொண்டு மற்ற பெண்களுடன் வம்புளந்து கொண்டிருக்கிருளாம். பொம்மனுட்டிகளே அப்படித்தான். அதிலும் உங்க அம்மா கேட்கணுமா?...

இந்த ஷேக்ஸ் பியரைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை. ஏன்னென்னமோ நாடகத்தை எழுதி நம்மபிராணனை வாங்கரான்கள். நன்ருகப்படித்துக்கொண்டிருக்கிறேன். நேற்று இன்ஸ்பெக்டர் வந்தார். உடனே பொடியும் பணமும் அனுப்பு. மறந்துவிடாதே.

அப்பா

* * * *

கிட்டுவுக்கு

''......அம்மா அனேக ஆசிர்வாதம் உங்க அப்பா நடத்தை எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவே இல்லை. இப்போ அவர் கிராப் வைத்துக் கொண்டு விட்டார். காலிகளோடெல்லாம் சுத்தரார். என்னமோ காதலாம் கத்திரிக்காயாம். யாரோ சுலோசனுவாம் சினிமாவிலே கெட்டழிஞ்சவ. அவளோடே காதல்

(28-ம் பக்கம்)

# சிரிக்கத் தெரியுமா?

பி. ஸ்ரீ

"என்ன கேள்வி! யாருக்குத் தான் தெரியாது?" என்று லேசாகச் சொல்லி விடலாம். ஏனெனில் மனிதனை மற்றப் பிராணிகளிடமிருந்து வித்தியாசப்படுத்திக்காட்டுவதற்கே அவனைச் 'சிரிக்கும் பிராணி' என்று சொல்லுவதுண்டல்லவா? மனிதவர்க்கத்துக்கு வெளியே பூலோகத்தில் சிரிப்பு என்பது கிடையாது; சிரிக்கும் திறனும் சிரிக்கும் உணர்ச்சியும் மனிதன் என்ற இருகால்-பிராணியின் ஏகபோக உரிமைதான்!

## நகைச் சுவையும் நாகரிகப் பண்பும்

எனினும் எல்லா மனிதர்களும் வேண்டும்போது சிரிக்கத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா? எந்தக் கலை பூர்ணமாகத் தெரிந்தாலும் தெரியா விட்டாலும், இந்தச் 'சிரிக்கும் கலை' யாவது சரியாகத் தெரிந்திருந்தால் போதும்: யுத்தக் கவலைகள் நிறைந்த இந்தக் காலத்திலும் அரசியல்-கவலைகள் நிறைந்த இந்த நாட்டிலும் வாழ முடியும். தற்கொலை செய்துகொள்ளாமலும், அந்தக் கவலைகளுக் கிடையே முழுகிப் போகாமலும் தலை தூக்கி வாழ முடியும்.



"எனக்கு நகைச்சுவை மட்டும் இல்லா விட்டால், எப்போதோ நான் தற்கொலை செய்து கொண்டிருப்பேனே!" என்று நமது காந்தியடிகளும் சொல்லியிருக்கிறாரல்லவா? எப்படியும், இந்த நகைச்சுவையில்லாதவர்கள் வாழ்க்கையில் ஒரு முக்கியமான சுவையை இழந்தவர்கள் தான்.

இந்தச் சிரிக்கும் திறமை மனித வர்க்கத்திலும் பகுத்தறிவால் பண்பட்ட-நாகரிகத்தால் மேம்பட்ட-வகுப்பினர்களின் விசேஷ குணம் என்று சொல்வதுண்டு. இப்படிச் சொல்லிக்கொண்டே வெள்ளைக்காரர்கள், "பகுத்தறிவில் நாங்களே தலைசிறந்து விளங்குகிறோம்: நாகரிகத்திலும் தலை சிறந்து விளங்குகிறோம்; நகைச்சுவையிலும் தலைசிறந்து விளங்குகிறோம்!" என்று மார் தட்டுகிறார்கள். தலை சிறந்து—ஆம் தலையிலே சிறந்து-விளங்கத்தான் செய்கிறார்கள். அதற்கு இந்த யுத்தமே சாட்சிதான். ஆனால் முக்கியமான நாகரிகப் பண்பாகிய இதயப் பண்பிலோ... அது வேறே சமாசாரம்! இந்தியா; இதயத்தில் மட்டுமல்ல, தலையிலும் சிறந்து விளங்கினால் தான் என்ன? அடிமை நாடு தானே! அப்படியெல்லாம் அவர்களைப்போல் தலைநிமிர்ந்து பேசமுடியுமா?

அது இருக்கட்டும். ஆனால் வெள்ளைக்காரர்களைபோல் நமக்குச் சிரிக்கத் தெரிகிறதா? சர்ச்சில் துரை—ஏன்? ஏமெரி துரைகூட-தங்களைப் பரிகாசிக்கும் ஹாஸ்யப் படங்களைக் கூடப்பார்த்துச் சிரித்துக் கொண்டிருப்பார்களே! அப்படிச் சிரிக்கத் தெரியுமா நம்முடைய தலைவர்களுக்கு? ஆம்; காந்தியடிகள் தவிர மற்றவர்களுக்குத்தான்!

எத்தனை ஹாஸ்யப் பத்திரிகைகள் ஹாஸ்ய நூல்கள் அந்த ஏமெரி நாட்டிலே உலாவி வருகின்றன! விலையைப் பொருட்படுத்துகிறார்களா? ஜனங்களைச் சிரிக்கச் செய்கிறவனும் தேசத் தொண்டு செய்கிறவன்தான் என்பது அவர்கள் அபிப்பிராயம். சார்லி சாப்லின் என்ற ஹாஸ்ய நடிகர் நம்முடைய பெரிய பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தர்களைவிட எவ்வளவோ வருமானம் உள்ளவரல்லவா? ஜனங்களுடைய சிரிப்பு-



உணர்ச்சியை அரசியல் துறையிலும் சமூகச் சீர்திருத்தத் துறையிலும் வெள்ளைக்காரர்கள் பயன்படுத்திக் கொள்வதைப் பார்த்தாவது நாமும் அப்படிச் செய்ய வேண்டாமா?

வெள்ளைக் காரர்களுக்குச் சிரிக்கத் தெரியும் என்று ஒப்புக் கொள்ளலாம். ஆனால் அவர்கள், "இந்தியர்களுக்குச் சிரிக்கத்தெரியாது; எவ்வளவு சாதுரியமாகவும் வேடிக்கையாகவும் எழுதினாலும் பேசினாலும் தமிழர்கள்சிரிக்கமாட்டார்கள்; கல்லுப் பிள்ளையார் போலவே முகத்தை வைத்துக்கொண்டிருப்பார்கள்; ஹாஸ்ய ரஸத்தை அநுபவிக்க மாட்டார்கள்" என்றெல்லாம் அதி

கப் பிரசங்கம் செய்யும்போது, நமக்கு உள்ளபடியே சிரிப்புத் தான் வருகிறது! நாம் அழு மூஞ்சிகளும் சுடுமூஞ்சிகளுமா யிருந்தால் அப்போதுதான் சிரிப்பு வருமா? இவ்வளவு அடிமைத் தனத்திலும் நகைச் சுவையை நாம் அறவே இழந்து விடாதபடி பார்துகாப்பது நமது நாகரிகப் பண்புதான்.

## பழமையும் புதுமையும்

நம்முடைய நாட்டிலும் ஹாஸ்யக்காரர்கள் இருந்திருக்கிறுர்கள். மிருகங்களைப்போல வும் பறவைகளைப் போலவும் சத்தம் போட்டுச் சிரிப்பை யுண்டாக்கும் விகடக்காரர் களை மட்டும் நான் இங்கே குறிப்பிடவில்லை. அவர்களில் சிலர் ரயில் போவது போல் சப்தம் செய்து காட்டுவதோடு,



ரயில் வந்து போகும் சமயங்களில் அந்த ஸ்டேஷன்களில் நடக்கும் தடபுடல்களையும், மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் படும் அவஸ்தைகளையும், அங்கும் இங்கும் இடம் அகப்படாமல் ஓடும் தவிப்பையும் பரபரப்புகளையும், ரயில்வே அதிகாரிகள் போலீஸ் அதிகாரிகளின் 'தர்பார்'களையும், துரைமார்களின் அதிகார வைபவங்களையும், 'ஜரிகைத் தலைப்பா— ஜமீன்தார்'களும் ரயில்வே துரைகளுக்குக்கூடக் குனிந்து குனிந்து சலாம் போடும் விந்தைகளையும் நடித்துக் காட்டுவார்கள், ஒரு ஹாஸ்ய நாடகம் போலே. அந்த விகடக்காரர்களிடம் ஓரளவு உண்மையான ஹாஸ்ய ரஸமும் காணப்படும்.

பழைய காலத்தில் நமது அரசர்கள் ஹாஸ்ய ரஸத்தின் அவசியத்தையும் சிரிப்பு-உணர்ச்சியின் பயனையும் உணர்ந்து தான் எத்தனையோ விகட கவிகளையும் விதூஷகர்களையும் பக்கத்திலே வைத்துக் கொண்டிருந்தார்கள். இராஜ்ய பாரமல்லவா? அதைத் தாங்குவதற்கும், அரசியல்-கவலைகளை மாற்றி உள்ளத்தை மகிழ்விப்பதற்கும் தெனாலிராமன் போன்ற விதூஷகர்கள் அவசியமென்றே கருதினார்கள்.

அந்த விதூஷகர்களிலும் விகடகவிகளிலும் சார்லி சாப்லின் போன்ற சில நுண்ணறிவாளர்களும் பகுத்தறிவாளர்களும் காணப்பட்டார்கள். அக்பர் சக்கரவர்த்தியின் விதூஷகனான வீரபாலன் தலை சிறந்த அறிவாளிகளில் ஒருவன் என்பது பிரசித்தமல்லவா?

அரண்மனைகளில் மட்டுமல்ல, கிராம நாடகங்களிலும் விதூஷகன் தோன்றி விடுவான். ஒரு முக்கியமான நாடக பாத்திரம் அவன். உப்பில்லாத பண்டம், பருப்பில்லாத கல்யாணம் போலே கோமாளியில்லாத கூத்தும்-என்றே நம்முன்னோர் நினைத்தார்கள். அந்தப் பழைய நாடகங்களில் ஹாஸ்யம் எப்போதும் உயர்ந்த ரகமானது என்று சொல்ல முடியாது. எனினும் ஹாஸ்ய உணர்ச்சிக்கும் ஹாஸ்யத் திறனுக்கும் குறைவு இல்லை.

வடமொழியில் 'ப்ரஹஸனங்கள்' என்ற ஒரு வகை ஹாஸ்ய நாடகங்கள் காணப்படுகின்றன. இவற்றில் எவ்வளவோ உயர்ந்த ரகமான ஹாஸ்யமும் இருக்கத்தான் செய்கிறது.

பழைய காவியங்களிலும் ஹாஸ்ய ரஸம் உண்டு. பிரசித்தமாகச் சொல்லப்படும் நவரஸங்களில் ஹாஸ்யரஸமும் ஒன்றல்லவா? ஹாஸ்ய ரஸத்தை நகைச்சுவை என்று தமிழில் சொல்லுகிறுர்கள். இனிப்பு புளிப்பு முதலான ஆறு சுவைகள் நாவுக்கு: செவிக்கோ ஒன்பது சுவைகள்!— என்று கருதி அந்த ஒன்பது சுவைகளில் நகைச்சுவையையும் வற்புறுத்தியிருக்கிறுர்கள்: அப்படிப்பட்ட தேசத்தார்களுக்குச் சிரிக்கத் தெரியாது என்று எப்படிச் சொல்லலாம்?

ஹாஸ்ய ரஸமுள்ள கதைகளும் பழைய காலத்தில் எத்தனையோ வழங்கி வந்திருக்கின்றன. இதிகாச புராணங்களிலும் இத்தகைய கதைகள் உண்டு. சாதாரணமாக வழங்கி வந்த மற்றக் கதைகளிலும், வேண்டிய அளவிற்கு நகைச் சுவையும் கலந்திருந்தது; கதா காலட்சேபங்களில் அதிக அளவிற்குக் கலந்திருக்கும். அந்த

(23-ம் பக்கம்)

பாரதி புதுவைநிகழ்ச்சி

# இரண்டுவித அனுபவம்

★

## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

விருந்தோம்பல் என்பது சுலபமான காரியமல்ல. வருபவர் மனம் கோணாமல் போக்கறிந்து விருந்திடல் நிரம்ப சிரமமானது. ஓர் நாள் புதுவை மடுவிற்கு அடுத்தாற் போலுள்ள "சித்தாந்த சாமி கோயில்" என்று தந்தையார் பாடியுள்ள கோயிலின் அருகிலுள்ள ஓர் வீட்டுக்குச் சென்றோம். அந்த வீட்டுக்காரர் மிக்க நல்ல குணம் படைத்தவர். தந்தையாருக்கு நண்பர் எத்தனையோ நாள்களாக எங்களைத் தன் வீட்டுக்கு வரும்படி விரும்பி அழைத்திருந்தார். ஓர் நாள் சாவகாசம் கிடைத்ததால் அங்கு புறப்பட்டோம். அவர் தந்தையாரை "வாருங்கள்" என்று உபசரித்து அழைத்தார். ஆனால் அவர் மனைவியோ எங்களைப் பார்த்தும் பாராது போவிருந்தார். சிறிது நேரம் எல்லாரும் அவர் வீட்டிலிருந்துவிட்டு மடுவிற்குச் சென்றோம். தந்தையாருக்குமிக்கஏமாற்றம்; தாயாருக்கோ வருத்தம். தந்தையார் எங்களைச் சிறிது கடு கடுப்பாகப் பேசினார்.

தாயார்:—நாம் சென்ற வீட்டுக்காரர் உபசரிக்காவிட்டால் நாம் என்ன செய்யலாம்?

தந்தை:—செய்யாதவருக்கு செய்து காட்டு. கொடாதவருக்குக் கொடுத்துக் காட்டவேண்டும்.

தாயார்:—(சலிப்போடு) வெகு அழகு! நீங்கள் கூறுவது. இன்று புறப்பட்டது பிசகு. நான் வீட்டிலேயே இருந்திருக்க வேண்டும்.

தந்தை:—அதெல்லாம் ஒன்றுமில்லை. 'நமக்கும் சமதிருஷ்டி வர வேண்டாமா? அவமதிப்புடன் நம்மை ஒருவன் நோக்கும்போது நாம் அளவற்ற பொறுமை வகித்து அவனிடம் அன்பாக இருக்கப் பழக வேண்டும். அதற்காகத் தான் அந்த அம்மாள் நம்மிடம் இப்படி நடந்து கொண்டாள்' என்றார். தாயார் ஒன்றுமே சொல்லவில்லை. பின்பு மடுவிற்குச் சென்றோம். ஓட்டலிலிருந்து காப்பியும், தின் பண்டங்களும் வர வழைத்துச் சாப்பிட்டு விட்டு ஊருக்குத் திரும்பலானோம். மற்றொரு நண்பர் எதிர்பட்டார். தந்தையாரையணுகி அன்புடன் தம் வீட்டுக்கழைத்தார். தாயார் அதற்கிணங்க விரும்பவில்லை என்று அவர் முகம் காட்டிற்று. எல்லோருக்கும் நல்ல பசி. "வீட்டிற்கே போய் விடலாமே" என்றார் தாயார். "இல்லையம்மணி அவசியம் என் வீட்டுக்கு வரத்தான் வேண்டு"மென்றார். அரை மனதோடு அவர் வீடு சென்றோம். அவர் வீடு குசேலர் வீட்டைப் போல் இருந்தது. அந்த வீட்டு அம்மையோ, மஹாலக்ஷ்மியை போல் சிரித்த முகத்துடன் எங்களுக்கு வரவேற்பளித்தாள். கணவர் "கவிஞரும் அவர் குடும்பத்தாரும் என் வீட்டுக்கு வர என்ன பாக்யம் செய்தேனோ!" என்று ஆனந்தங் கொண்டிருந்தார். எங்கள் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான் அவர்கள் வீட்டிலில்லை. கொஞ்சம் தோசை மா மட்டும் இருந்தது. எண்ணை— இலை, விறகு ஒன்றும் கிடையாது. அடுத்த வீட்டுக்குச் சென்று ஒரு கரண்டி எண்ணை வாங்கி வந்தாள். சமையற் கட்டுக்கு கூரை வைத்திருந்தது. அந்தக் கூரையிலிருந்து இரண்டு ஓலையைப் பிரித்து அடுப்பு மூட்டி தோசையை வார்த்தாள். தோசை ரொம்ப ருசியாயிருந்தது. எங்களுக்கு நல்ல பசி. அதோடு அந்தம்மாளின் உள்ளன்பு—அதைக் கண்டு எங்களுக்கு வயிறு நிரம்பிவிட்டது. தந்தையார் சந்தோஷத்தோடு "அடிசிற் கினியாளே. அன்புடையவள்" என்று தெய்வப் புலவர் திருவள்ளுவர் தம் மனைவியை நோக்கிக் கூறியது உமது மனைவிக்குப் பொருந்தும் என்று புகழ்ந்தார். "தமது வாயால் புகழுரை பெறுவதற்கு பாக்யம் செய்திருக்கிறாள்" என்றார் அவர். சிறிது நேரம் கழிந்ததும் வீடு சென்றோம்.

# காதல் சோதனை

*

## நியாயவாதி

### 1

ஏழுநூறு வருஷங்களுக்கு முன் அங்கநாட்டை அக்ஷயன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு வயது இருபத்தைந்திருக்கும். அவனுக்கு விவாகம் நடைபெறவில்லை. அவனது பதவிக்கு ஏற்றபடி நல்ல அரச வம்சத்திலுதித்தவளும்குணத்திலும் அழகிலும் சிறந்தவளுமாயுள்ள அரசகன்னிகையை அவனுக்கு மனைவியாக்க வேண்டும் என்று அவனது அன்னையான ராஜமாதேவி விரும்பினாள்.

அக்ஷயன் பட்டத்துக்கு வந்தவுடன் அவன் செய்த முதல் காரியம் அதுவரையில் அமைச்சனாய் ராஜகாரியங்களை நிர்வகிக்க நிர்க்குணனை வேலையினின்று நீக்கியதேயாகும். அதற்குப் பலவிதமான காரணங்கள் பலர் கூறினர். எனினும் புதிய மன்னனுக்கு பழைய மந்திரிக்கும் பரஸ்பரம் மனவேற்றுமையிருந்ததே உண்மையான காரணம் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை.

ஒரு ராஜ்யத்தில் சகல அதிகாரங்களையும் வகித்த ஒருவன் திடீரென்று அப்பதவியிலிருந்து நீக்கப்பட்டால் சும்மா இருப்பானா? நிர்க்குணன் புது மன்னனைக் கவிழ்க்க பலசதிகள் செய்தான். ஆனால் அவை ஒன்றும் பலிக்கவில்லை. அக்ஷயன் மிகவும் எச்சரிக்கையாகவேயிருந்தான். கலகங்களெல்லாம் அடக்கப்பட்டன. கலகக்காரர்கள் தண்டிக்கப்பட்டனர். அவற்றுக்கு மூலகாரணமாயிருந்த மாஜிமந்திரி நாட்டைவிட்டு ஓடவேண்டியதாயிற்று.

பக்கத்து தேசத்திலுள்ள ஒரு மடத்தின் தலைவன் நிர்க்குணனின் சகோதரன். அவனது மடத்தில் நிரந்தரமாகத் தங்கினான். அங்க தேசத்தை விட்டு ஓடி வந்த அமைச்சன் அங்கிருந்து கொண்டு தன்னை அதிகாரத்திலிருந்து ஓட்டிய அரசனை எப்படி ஒழிப்பது என்பதிலேயே தன் கவனத்தைச் செலுத்தினான்.

அவன் ரஸாயன சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவன். பலவிதமான கொடிய விஷயங்களை எடுத்து சோதனைகள் நடத்தியவன். அக்ஷயனை விஷத்தால் கொல்ல ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது அவனது தீர்மானம். தனது கருத்தை நிறைவேற்றி வைக்கக்கூடிய ஆள் அகப்படுமோ என்று அவன் ஆராயத்தொடங்கினான்.

அச்சமயம் அவனை நாடி வந்தாள் விலாஸவதி. அவள் பதினேழு பிராயமுள்ள பருவ மங்கை. அழகில் ஒப்பற்றவள்; மிருதுபாஷினி. இனிமையான சுபாவத்தினள். அவள் நிர்க்குணனுக்கும் அவனது ஆசை நாயகியாயிருந்த ஒரு வேசிக்கும் பிறந்தவள். ஆனால் அவள் தந்தை யார் என்பதை உலகம் அறியாது.

அவள் கணிகையின் வயிற்றில் பிறப்பினும் அவள் மீது அபாரமான பாசம் வைத்திருந்தான் நிர்க்குணன். அவனுக்கு வேறு மக்களில்லாததே அதற்குக் காரணம். அவள் போஷணைக்காக தங்க ஏற்பாடுகள் செய்தான். சீருடனும் சிறப்புடனும் அவள் வளர்ந்தாள். அவளுக்கு ஏற்ற வித்தியாப்பியாஸமும் சங்கிதப் பயிற்சியும் அளிக்கப்பட்டன. வேசியர் குலத்தில் பிறந்த போதிலும் அவள் அவ்வாழ்க்கையைக் கைக்கொள்ள விரும்பவில்லை. நாடு கடந்த தனது தந்தையின் விருப்பத்தின்படி நடக்க விரும்பிய அவள் அவனை நாடி வந்தாள்.

### 2

விலாஸவதியைப் பார்த்த பின்னர்தான் மாஜி மந்திரிக்கு தனது கொடிய சூழ்ச்சியை நிறைவேற்றும் உபாயம் புலப்படலாயிற்று. அது என்னவெனில் அவளை அங்க தேசத்துக்கு அனுப்பி அவர் மீது அவள் மூலம் விஷப்பிரயோகம் செய்து அவனைக் கொல்லுவது என்பதேயாகும். தன் மகளை அழைத்து தகுந்த போதனைகள் செய்தான். நன்றி கெட்ட அரசனைக் கொல்லுவது பாவமில்லை என்று அவன் நியாயங் கூறினான். "மீண்டும் உன் தந்தை ராஜரீகம் வகிப்பதற்கு நீ உதவி செய்வது உன்து கடமையல்லவா?" என்று வினவினான். அதற்கு அவள் ஒப்புக் கொண்டாள்.

அவளது சம்மதத்தைப் பெற்று மகிழ்ச்சி கொண்ட அவன் தந்தை "நீ அங்க தேசம் சென்று அரசன் அன்னையிடம் சேடியாய் அமர்வாயாக. அரசனுக்கு எப்பொழுதும் ஒரு அடைப்பைக்காரன் உண்டு. எப்படியாவது நீ அவனை வசியம் செய்து கொள்ள வேண்டும். சமயம் பார்த்திருந்து அரசனுக்கு அவனால் கொடுக்கப்படும் தாம்பூலத்தில் விஷத்தைக் கலந்து அதை அவன் உட்கொள்ளும்படி செய்வாயாக" என்றான்.

தந்தையின் ஆணையைச் சிரமேல் கொண்ட மகள் அங்க நாட்டுக்குப் புறப்பட்டாள்.

### 3

அங்க தேசத்தை அடைந்த பின் விலாஸவதி அரசனின் அன்னையான ராசமாதேவியின் சேடியாய் அமர்ந்தாள். அரசனது சமூகத்துக்கு அடிக்கடி வருவதற்கும் அவளுக்குப் பல வசதிகள் ஏற்பட்டன.

அரசனது அடைப்பைக்காரன் ஒரு அழகிய இளைஞன். அவன் பெயர் ஆனந்தன். பெயருக்கு ஏற்றபடியே அவனது சுபாவமும் இருந்தது. யாரையும்

எளிதில் வசீகரிக்கும் சக்தியுடைய அவனை வசீகரிக்க முயன்றாள் விலாஸவதி. அவன் மூலமாகத்தான் தனது தந்தையால் நியமிக்கப்பட்ட கொடிய காரியம் நிறைவேறும் என்பது அவளது நம்பிக்கை.

நாட்கள் பல சென்றன. அரசன் விலாஸவதியின் அற்புதமான எழிலால் கவரப்பட்டான். அவளை தனியே சந்தித்து அவளுடன் இன்புறுவதே அதிருஷ்டம் என்று எண்ணினான். அக்ஷயன் மீது விலாஸவதி காதல் கொண்டாள். தான் மேற்கொண்டு வந்த கொடிய சூழ்ச்சியை மறந்தாள். பற்பல இன்பக் கனவுகள் கண்டாள். அவை பலிக்குமோ என்று ஏங்கினாள்.

## 4

நவராத்திரி பண்டிகை சிறப்பாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. அது பூர்த்தி பெற இன்னும் இரண்டு நாட்கள் பாக்கி.

இன்பகரமான நிலவு. உத்தியானவனத்தில் இருவர் உரையாடிக்கொண்டிருந்தனர். ஒருவன் ஆனந்தன், இன்னொருத்தி விலாஸவதி. அவர்கள் சம்பாஷணை பின்வருமாறு:—

ஆனந்தன்:—உன்னிடம் நான் உண்மையை ஒளிக்காமல் சொல்லப்போகிறேன். ஏனெனில் நீ என்னை காதலிக்கிறாய் என்று தோன்றுகிறதால் உனக்கு ஏற்பட்டுள்ள ஏமாற்றத்தை அகற்ற வேண்டியது என் கடமை.

விலாஸவதி:—ஏமாற்றமா? அது என்ன?

ஆனந்தன்:—உன் ஏமாற்றம் இதுதான். நீ என்னை ஆண் என்று நினைக்கிறாய். ஆனால் நான் ஆண் அல்ல. பெண். என் பெயர் அஞ்சனவதி.

விலாஸவதி பிரமிப்புடன் ஆனந்தனை உற்று நோக்கினாள்.

ஆனந்தன்:—ஆம்! நான் பெண் தான். நான் ஆண் வேடம் பூண்டதற்குக்காரணம் இந்த அரசன் தான். அவன் என் மீது காதல் கொண்டான். என்னுடன் பிரியாமல் இருக்க விருப்பிய அவன் என்னை ஆணுடை தரிக்கச் செய்து தனது அடைப்பைக்காரனாக்கினான்.

விலாஸவதி:—(ஆச்சரியத்துடன்) அப்படியா?

ஆனந்தன்:—ஆம் அரசனுக்காக சகலத்தையும் துறந்த நான் அவனது அடைப்பைக்காரனானேன். அவனது பிரேமை என்றும் குன்றாது என்று எண்ணினேன். (பெருமூச்சுடன்) என்ன மதியீனம்!

விலாஸவதி:—ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?

ஆனந்தன்:—கொஞ்ச நாளாக நான் அரசனைக் கவனித்தேன். அவன் நாட்டம் வேறு ஸ்திரீயின் மீது விழுந்து விட்டது என்பதை திண்ணமாய் அறிந்தேன். என் மீது அவன் கொண்ட பிரேமை மாறி விட்டது. என் வாழ்வு முறிந்துவிட்டது. என் நெஞ்சம் இடிந்து விட்டது. இனிமேல் என்னால் செய்யவேண்டியது ஒன்றே தான். அது என்னவெனில் என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டியது தான்.

விலாஸவதி உள்ளம் நடுங்கியது. ஆனால் அதை அவள் வெளிக்காட்டவில்லை.

மற்றவள் மேலும் கூறினாள்:—"என் வாழ்வைக் கெடுத்தவள்—அரசனின் புதிய ஆசை நாயகி—யார் என்பது தெரியவில்லை. அவளைக் கண்டு பிடிக்க என்னால் இயலவில்லை. ஆதலால் அவளைக் கொல்லுவது என்னால் சாத்தியமல்ல. எனவே இந்த விழாவின் கடைசி இரவில் அரசன் தனது கொலுவை கலைக்கும்பொழுது அவனுக்கு நான் விஷத்தாம்பூலத்தை அளிக்க எண்ணியிருக்கிறேன். எனக்கு துரோகம் செய்த என் காதலன் என் கையால் இறக்க வேண்டும் என்பது என் சங்கல்பம் என்று கூறிவிட்டு அடைப்பைக்காரன் ரூபத்தை தரித்த அஞ்சனவதி அப்பால் சென்றாள். விலாஸவதி உணர்வையிழந்த பிரதிமைபோல் அசைவற்று நின்றாள்.

## 5

நவராத்திரி விழாவின்கடைசி தினக்கொண்டாட்டம் முடிந்தது. அதை சிறப்பாய் முடித்த பின் அரசன் சபையைக் கலைத்தான். தனது சிம்மாஸனத்தை விட்டு எழுந்து பக்கத்திலிருந்த அடைப்பைக்காரனை நோக்கி தாம்பூலத்துக்காக கையை நீட்டினான்.

(20-ம் பக்கம்)

# கண்டதும் கேட்டதும்

★

'நீலம்'

## மடை திறந்தது!

தொடர்ச்சியாகப் பல வருஷங்கள் வாழ்ந்தவர்களும் கிடையாது! கெட்டவர்களும் கிடையாது! இந்தப் பழமொழி அன்றாட வாழ்க்கையில் சுக துக்கங்களை மாறி மாறி அனுபவித்தவர்கள் நன்கு தெரிந்து கொண்டதாகும். சங்கீதத்துக்கும் இந்தப் பழமொழி ஓரளவு பொருத்தமுடையது தான்போலும்! மகாராஜபுரம் ஸ்ரீ விச்வநாதய்யர் ஒரு காலத்தில் பாடிய பாட்டு அடாடா! என்ன அற்புதம்! என்ன அற்புதம்! என்று அவரது பூர்விகக் கியாதியைப் பற்றியே சென்ற சில வருஷங்களாக ரஸிகர்கள் பேசிவந்தனர். இடையே சில வருஷங்கள் அவர் பாட்டு அவ்வளவு பிரசித்தமில்லாமல் சற்று மங்கியேயிருந்தது. சாரீர நிலையும் இதர வசதிகளும் சௌகர்யமாக இல்லாததாலோ என்னவோ பழைய புகழிலேயே அவரது சங்கீதச் சக்கரம் சுழன்றது. இந்த வருஷம் முதற்கொண்டு அவர் அசல் மகாராஜபுரமாகவே மாறிவிட்டார்! பாட்டு அமைந்தாலும் அமையாவிட்டாலும் ஹாஸ்யகரமான சம்பவங்களை அவர் தமது கச்சேரிகளில் கூடவே புகுத்துவார். கச்சேரி சிறப்பாக அமைந்துவிட்டால் ரஸிகர்களுக்கு ஹாஸ்ய கட்டங்கள் மறந்துவிடும். இல்லையானால் அவரது ஹாஸ்யக் காட்சிகளை மட்டும் கண்டு விட்டு திரும்ப நேரிடும். சென்ற சில வருஷங்களிலெல்லாம் அவரது கச்சேரிகளில் மேற்படி இரு அம்சங்களில் ஏதாவதொன்று தான் பிரசித்தமாக விளங்கி வந்தது. இப்போது அப்படியில்லை. கானமும், ஹாஸ்யமும் ஒன்ருகச் சேர்ந்து சரிசமமான நிறையில் பிரகாசிக்கின்றன அவர் கச்சேரியில்.

சென்ற ஞாயிறன்று திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி சபையில் நடந்த கச்சேரியை இதற்கு ஓர் சிறந்த உதாரணம் எனலாம். அன்று அவரது பாட்டு படுதரமாக அமைந்துவிட்டது. ஆபோஹி (எவரி) ராகத்தில் வர்ணம்பாடியது முதல் காம்போஜி பல்லவி வரையில் அவரது உற்சாகம் மிகத் தீவிரமாகவிருந்தது. "உண்டேதி ராமுடு" என்ற ஹரிகாம்போஜி ராக உருப்படியை சுகம் தோய்ந்த சங்கதியொன்றைப் பொறுத்தி அற்புதமாகப் பாடினார். "ராம நன்னுப்ரோவரா" என்ற ஹரிகாம்போஜி ராக உருப்படியின் சகோதரன் போல விளங்குவது மேற்படி கீர்த்தனை! அதை மகாராஜபுரம் வெகு இனிமையோடு அனுபவித்துப் பாடினார். கல்யாணி ராகம் பாடுவதில் மகாராஜபுரத்தின் பாணி அலாதி. அந்த அம்சம் பூராவும் அன்றையகச்சேரியிலும் அமைந்தது. அவர் பாடியவற்றிலெல்லாம் தலை சிறந்து விளங்கிய ராகம் ஆபேரி. அதில் "நகுமோமு" கீர்த்தனையைப்பாடினார். சந்தனத்துக்கு இயற்கையில் மணமுண்டு. அதன் மணத்தை அதிகப்படுத்துவதற்கு அத்தர், ஜவ்வாது, புனுகு முதலிய பரிமளசரக்குகளைச் சேர்ப்பது வழக்கம். மணம் செழிக்கச் செய்வதுதான் அடி கலவைக்குக் காரணம். அதேபோல ஸங்கீத பூபதி, ஆபேரி ராக ஆலாபனையைக் கையாண்டார். அதன் மணம் மிகப் பிரமாதமாக விருந்தது. அவ்வளவு வசிகரமாகப் பாடி விட்டார். தேக்கி மடக்கி வைத்திருந்த மடையைத் திறந்தாற்போல் அவரது சாரீரம், கனம், நயம் பொருந்தி சோபித்தது அன்று. பக்க வாத்தியக்காரர்கள் நல்லஇடங்களைத் தம்மைப்போல அனுபவித்து வாசிக்கும் போது மகாராஜபுரம் சற்று கம்மிய குரலுடன் "பேஷ்! பேஷ்!

(29-ம் பக்கம்)

## அட்டைப் படம்

★

இவ்வாரஇதழில் "சுதேசமித்திரன்" வைரவிழாப் பாட்டுக்கள் ஸ்வரத்துடன் வெளியாகியிருக்கின்றன. இப்பாட்டுக்கள் இரண்டும் ஸரஸ்வதி ஸ்டோர்ஸில் இசைத்தட்டுகளாகப் பதிவாகியுள்ளன. ஸங்கீதரத்னகர, அரியக்குடி ஸ்ரீ ராமானுஜய்யங்கார் பாடியவை அவை. இசைத்தட்டுகள் பதிவாகு முன் எடுத்த படம் தான் அட்டையை அலங்கரிக்கிறது. ஸங்கீத ரத்ன மைசூர் டி. சௌடையா, பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் இருவரும் ஸ்ரீ அய்யங்காருடன் காட்சி அளிக்கின்றனர்.

சங்கீத ரத்னாகர ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் பாடியது

ராகம்: சுருட்டி                                        தாளம்: ஆதி

பல்லவி

சீர் பெருந்தும் சிறந்த மித்ரன் — அது
பார் மீதிலே மிக ப்ரஸித்தம் (சீர்)

அனுபல்லவி

பேரோங்கி வரும் திரு மாலோன் அருள் புரியும்
பார் புகழும் பாரத சுதேசமித்திரன் (சீர்)

சரணம்

அன்று பொன் விழாக் காட்சி ஆனந்தம் நிறையாட்சி
இன்று வைர விழா இயல்பொடு கொண்டாடச்
செய்த மணியன் தோற்றி அரங்கன் செழிக்க யேற்றி
ஸ்ரீனிவாஸன் போற்றும் ராமதாஸன் வாழ்த்தும் (சீர்)





...பாட்டுக்கள்

...ார் பாடியது

தாளம்: ஆதி

(சீர்)

...யும்

(சீர்)

...றைபாட்சி

...டச்

...க யேற்றி

...த்தும் (சீர்)

ராகம் : ஸிந்து பைரவி தாளம் : தேசாதி

பல்லவி

கொண்டாடுவோம் — உன்னைக்
கொண்டாடுவோம் — என்றும்
கொண்டாடுவோம் — மித்திரனைக்
கொண்டாடுவோம் — தேசமித்திரனைக்
கொண்டாடுவோம் — சுதேசமித்திரனைக் (கொ)

அனுபல்லவி

அறுபத்தாம் நான்காண்டில்
அருமை வைர விழா (கொ)

சரணம்

தமிழ்மண்டலத்தாரண
தமிழகம் செழிக்கவே
தமிழன் தரணியைத் தாங்கக்
கொண்டாடுவோம் (கொ)









III

ராகம்: சுருட்டி. தாளம்: ஆதி

ஆ: ஸரிமபநிஸ—அ: ஸநிதப மகபமரிஸ.

28-வது கர்த்தா (ஹரிகாம்போஜி) வில் ஜன்யம்.

பல்லவி

; —ஸ்ா நிதா பா, பமகரிம | கஸரிமபா, | ; ; ரிம ப நி ||
சீர் பெருகும் சிறந் . த . | . . மித்ரன் . | . . . . . . . . ||
ஸ்ா நி— ரிஸ் நிதா பா, சிறந்த | மித்திரன் | ; ; மகரிம ||
. . — சீர் . பெருகும் | | அ . து . ||
க ஸா — ரி ம பா நி ஸ்ா, ரி ஸ்ா ஸ்ா | ஸ்ஸ் நித நிஸ்ா | ஸ்ஸ் நிதபரி ரிம ||
. . — பார் - மீ தி லே மி க ப்ர | ஸி . . . த்தம் . | . . . . . . . . ||
ப நிஸ் —
. . . — (சீர்பெருகும்)

அனுபல்லவி

; , ஸ்ா நித பாபா பா பா நிம பா | ; , மப ஸ்நிதா நி | ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ||
பே ரோங் . . கி வரும் தி . ரு | மா லோன் . . அ | ருள் பு ரி யும் ||
; , நீ நி நீ நீ, தா நி ஸ்ா | ; , ஸ்ா நித பா பா | பப மகரி ஸ
பார்புகழும் பாரத | சுதே . . ச | மி . த்தி . . .
ரிம || பநிஸ்
ரன் || . . . (சீர் பெருகும்)

சரணம்

; , மா ம மா மா மா ம க ரி ம | க ஸா ரிம பா, ஸ்
அன்று பொன் விழா. கா . க்ஷி . | . . ஆ . ன ந் .
நித | பா மமக பமகரி ரிஸ ||
தம் . | . நிறை . யா . . . க்ஷி . ||
; , ரிமரி ஸா ஸா ஸரி ரிஸநீ ஸா | ; , ரிம மரிம |
இன்று வ யி ர . வி . . மூ | இயல்போ . . டு |
பா, ஸ் நித பா பா ||
கொண் . டா . டச் ||
; , ஸ்ஸ் நித பாபா நீ நிம பா | ; ; மப ஸ்நிதா
செய் . த . மணியன் தோ . ற்றி | அரங் கன் . .
தநி | ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ||
செ . | ழிக்க யேற்றி ||
; , நீ நி நீ ; நீ நிதா நி ஸ்ா | ; , ஸ்ா நித | பா |
ஸ்ரீனி வாஸன் போ . . ற்றும் | ரா ம . | தா |
பா, பமக ரிம || பநிஸ்
ஸன் வா . . ழ்த்தும் || . . . (சீர் பெருகும்)

## காதல் சோதனை

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

அச்சமயம் அடைப்பைக்காரன் பக்கத்திலிருந்த விலாஸவதி அரசனுக்காக தயாராயிருந்த தாம்பூலத்தை வெடுக்கென்று பிடுங்கி உட்கொண்டாள். "அஞ்சனாவதி. உன் வஞ்சத்துக்கு ஏற்றவள் நானே அரசரை மன்னித்து விடு" என்ருள்.

மறு நிமிடம் அடைப்பைகாரன் வேடத்தை கலைத்த அஞ்சனாவதி அவளைக் கட்டிக்கொண்டாள். "விலாஸவதி! உன் காதலின் திறமையை இன்று தெரிந்துகொண்டேன். அரசருக்கு ஏற்றவள் நீயே. நீ உட்கொண்டது விஷமல்ல. உன்னை சோதிக்கவே நான் இப்படி தந்திரம் செய்தேன். நீ என் சோதனையில் வெற்றி பெற்ருய். நான் விலகி விடுகிறேன்" என்ருள். அவள் கண்களில் நீர்ததும்பியது.

சபையிலுள்ள எல்லாரும் அடைந்த பிரமிப்புக்கு அளவே இல்லை. அரசனுக்கும் விஷயம் புரியாததால் விழித்தான்.

அஞ்சனாவதியும் விலாஸவதியும் எல்லாவற்றையும் அவனுக்குக் கூறினர். அவற்றை உணர்ந்த பின் அரசன் அவ்விருவரது காதலையும் மெச்சினன். உடனே ஒரு நீதி மன்றத்தை நிறுவி அவர்களில் எவரது காதல் சிறந்தது என்பதை நிர்ணயிக்கும்படி கூறினன். அவர்களது தீர்ப்பின்படி நடக்க அவன் தீர்மானித்தான்.

ஆனல் அந்நீதிமன்றத்தால் விஷயம் நிர்ணயிக்கப்படவில்லை. ஏனென்ருல் அப்படிச் செய்ய அதனல் இயலவில்லை. அதனல் விஷயம் 700 வருடங்களுக்குப் பின் ஒத்திவைக்கப்பட்டது. ஆதலால் விலாஸவதியோ அஞ்சனாவதியோ அரசனை மணக்கவில்லை.

எழுநூறு ஆண்டுகள் கழிந்து விட்டனபடியால் இவ்விஷயத்தை வாசகர்களின் தீர்ப்புக்கே விட்டு விடலாம்.

# ஆசிரியர் விக்ரமன்

*

வ. ரா.

பொழுது விடிந்தது, ஆனால் ஆசிரியர் விக்கிரமனுடைய முகத்தில் கவலையொன்றே காணப்பட்டது. ஏதோ யோசனையில் அவர் ஆழ்ந்து கிடந்தார். இதே சமயத்திலா, அவருடைய மனைவி அங்கே வர வேண்டும்? வந்ததும் வராததுமாக, 'ராத்திரி உங்களிடம் சொன்னதெல்லாம் மறந்து போச்சா' என்று மனைவி கண்டிப்பான குரலோடு கேட்டாள். அதைப்பற்றித்தான் யோசனை என்றார் ஆசிரியர். 'யோசித்துக் கொண்டேயிருங்கள். நம்ம ஜன்மமும் முடிந்து போய்விடும். அதற்குமேல் ஒன்றும் செய்ய வேண்டாமோன்ன' என்று மனைவி தன்னுடைய ஆத்திரத்தை காண்பித்தாள்.

ஆசிரியருடைய மனைவி, ராத்திரியில் சொன்னதுதான் என்ன? 'வேறொன்றுமில்லை. அரிசியில்லையாம், விறகு இல்லையாம், மளிகை சாமன்கள் பல இல்லையாம். பால்காரனுக்கு கொடுக்க கையில் பணமில்லையாம். அடுத்த வீட்டில் வாங்கின துவரம்பருப்பை கேட்கிறார்களாம். இது எல்லாம் போதாதோ என்று சொல்லும்படியாக, அந்த அம்மாள் அந்த வாரம் எந்த சினிமா படம் பார்ப்பதற்கும் போக முடியவில்லையாம்.

ஆசிரியருக்கு இவைகளைக் காட்டிலும் பயங்கரமான வேறு சேதிகள் வேண்டுமா? எனவே, முகவாட்டத்தோடு அவர் உட்கார்ந்து கொண்டிருந்ததற்கு இதுதான் காரணம். திடீரென்று ஆவேசம் வந்தது போல அவர் பேச ஆரம்பித்தார். 'நான் பக்த குசேலன். நீ என்னை குபேர குசேலனுக்கப் பார்க்கிறாய். நான் என்ன செய்வேன்? நான் எழுதுகிறதெல்லாம் முதல்தரமான எழுத்து என்பது என் நம்பிக்கை. ஆனால் அது மார்க்கட்டில் எடுபடுகிறதில்லையே! மட்டமான எழுத்தை யெல்லாம் ஆயிரமாயிரமாக கொடுத்து வாங்குகிறார்கள். என் எழுத்துக்கு பத்து ரூபாய் கூட கிடைக்க மாட்டேன் என்கிறதே!' அந்த பத்து ரூபாய்க்குகூட எத்தனை தடவை கால்கடுக்க நடக்க வேண்டியிருக்கிறது' என்று விக்ரமன் தனது ஆவேசத்தை ஒருவாறு முடித்துகொண்டார்.

ஆசிரியருடைய ஆவேசம் அவருடைய மனைவிக்கு மனதில் அமைதியை உண்டாக்கவில்லை. 'ரொம்ப கஷ்டமான நிலைமையில் குத்திக் காண்பிப்பது கூடாது. இருந்தாலும் நீங்கள் சொல்லுகிற நொண்டி சமாதானம் யாருக்கு பிடிக்கும்? மட்டமான எழுத்துக்கு யாரும் ஆயிரமாயிரமாக கொடுக்க மாட்டார்கள். உங்களுக்கு ஸ்வாரஸ்யமாக எழுதத் தெரியவில்லை. அதை ஏன் மூடி மூடி வைத்து மழுப்புகிறீர்கள்' என்று மனைவி நாக்கில் நரம்பில்லாமல் சொல்லிவிட்டாள்.

ஆசிரியருக்கு உண்டான வருத்தத்துக்கு எல்லையில்லை. 'பைத்தியமே! கேள். உனக்கு மகாபாரதம் தெரியுமா' என்று ஆசிரியர் ஆத்திரத்தோடு கேட்டார்.

'மகாபாரத கதை வேறே தெரியவேண்டுமா? தினந்தினம் நம்ம வீட்டிலேதான், மகாபாரதம் நடந்துகொண்டேயிருக்கிறதே! அப்புறம் கதை எதற்காக' என்றாள். ஆசிரியருக்கு கோபம். சொல்லுவதை கேட்கிறாயா இல்லையா? என்று அவர் மனைவியை அதட்டினார்.

'நீங்கள் சொல்லுகிறதை கேட்டால், நான் கேட்டதெல்லாம் வந்து விடுமா? அரிசி வருமா? விறகு வருமா? சினிமா போகலாமா? பணங்கிடைக்குமா?' என்று சிரிப்பை வாய்க்குள் அடக்கிக்கொண்டே கேட்டாள்.

'ராமாயணம் புண்ய கதை. அதை கேட்கக்கேட்க மனிதர்கள் புனிதர்களாக ஆவார்கள். ஆனால் பாரதக்கதை அப்படியல்ல. அதைக் கேட்டால் மனிதர்கள் புத்திசாலிகளாக ஆவார்கள். நீ புத்திசாலியாக ஆக ஆசைப்படுகிறாயா இல்லையா?' என்று ஆசிரியர் சிரித்துக் கொண்டு கேட்டார்.

'உங்கள் புத்திசாலித்தனமே விலைபோகவில்லையே! அப்படியிருக்க, நான் ஏன் புத்திசாலி ஆகவேண்டும்' என்று மனைவி கிண்டலாகப் பேசினாள். 'எனக்கு எதற்கு புத்திசாலித்தனம் என்றுநீசொல்லுகிறாயே, அதுதான் புத்திசாலித்தனம். பார்த்தாயா? மகாபாரதக் கதையை கேட்பதற்கு முன்னாலேயே, நீ புத்திசாலி ஆகிவிட்டாய். அது தான் மகாபாரதத்தைப் பற்றிய மகிமை' என்று ஆசிரியர் கிண்டல் செய்தார்.

'கதை சொல்ல வேண்டும் போல, உங்களுக்கு இப்பொழுது இருக்கிறதாக்கும். சரி, கதை சொல்லுங்கள், நான் கேட்கிறேன். கதை கேட்டுக் கொண்டிருந்தால், சமையல் முடியாது. அது தெரியுமோல்லியோ!' என்றாள் மனைவி. 'நீ ராத்திரி என்னிடம் சொன்னதைப் பார்த்தால், வீட்டில் சமையலுக்கு ஒன்றுமே இல்லை போலல்லவா இருந்தது? இப்பொழுது சமையலைப்பற்றி பேசுகிறாயே?' என்று ஆசிரியர் திகைப்போடு கேட்டார்.

'பெண்களாகிய நாங்கள், அசடு வழிகிற ஆண்பிள்ளைகள் அல்ல, அர்த்தமில்லாமல் எழுதுகிற ஆசிரியர்களுமல்ல. நாளைக்கு சமையலுக்கு ஒன்றுமில்லை என்று சொல்லும்பொழுது, நாலு நாளைக்காவது வேண்டிய சாமான்கள் கையிருப்பு எங்களிடம் இருக்கும்.

மேலும் உங்களைப்போல ஆண் பிள்ளைகள் காரியத்தை உடனே செய்து விடுவார்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு கிடையாது' என்று மனைவி சிரித்துக் கொண்டு சொன்னாள்.

'அப்படியா கதை? சரி. அப்படியானால் கதை வேண்டாம். நீ சமையலைப் போய்ப் பாரு. நீ ராத்திரி செய்த பிரசங்கம் ஜீரணகாரி லேகியமாக மாறி, ஊர்ப்பட்ட பசியை கிளப்பி விட்டிருக்கு. சமையல் செய்தால், சம்பிரமமாக சாப்பிடலாம்' என்றார் ஆசிரியர் நாக்கை நொட்டை விட்டுக் கொண்டு. 'நீங்கள் ஆரம்பித்த ஜோரிலே, மகாபாரதக் கதையை கேட்டால் தான், வேலை ஓடும் போலிருக்கிறது. ஆகையினாலே கதையைச் சொல்லுங்கள், கேட்கிறேன்' என்றாள் சகதர்மிணி மிக்க விநயத்தோடு.

ஆசிரியர் பிரமித்துப் போனார். கிணறு வெட்டப் போய், பூதம் புறப்பட்ட கதையாகி விட்டதே என்று மனதுக்குள் எண்ணிக் கொண்டார். இந்த தர்ம சங்கட நிலைமைக்கு மாற்றுத் தேட அவருக்குத் தெரியவில்லை. அவருடைய மனைவி இதற்கும் வழி காண்பித்தாள்.

'நீங்கள் பட்டினியோடு கதை சொல்லவேண்டாம். ஒரு நாழிகைக்கு முன் எங்கள் அம்மா ஊரிலிருந்து வந்தார்கள். அது உங்களுக்குத் தெரியாது. உப்புமா அவசரடி ஆகாரமல்லவா? அது நடந்து கொண்டிருக்கிறது. வயிற்றை நிரப்புவதற்கு அதுவும் தொண்டையை நனைப்பதற்கு காப்பியும் இதோ வரும். இரண்டையும் அருந்திய பிறகு நீங்கள் கதை சொல்லலாம்' என்று மனைவி சந்தோஷத்தோடு சொன்னாள்.

'அதிருக்கட்டும். உங்கள் அம்மா வந்தது சந்தோஷம். உப்புமா வருகிறது, அதைவிட சந்தோஷம். நீ இலக்கண வக்கணையாகப் பேசுகிறது, அதைக் காட்டிலும் சந்தோஷம்' என்று சொல்லி ஆசிரியர் சிரித்தார்.

'நீங்கள் இலக்கணம் என்று சொல்லுவது, லக்ஷணம் என்ற வார்த்தை தானே? லக்ஷணத்திலே, பெண்கள் ஆண்களை விட ஆயிரமடங்கு உயர்ந்தவர்கள். ஆண்கள் பெண்களுக்கு இலக்கணத்தைப்பற்றி உபதேசம் செய்யப் பார்ப்பது, கொல்லத் தெருவில் ஊசி விற்பதைப்போல இருக்கிறது' என்று மனைவி வெகு குதூகலத்துடன் சொன்னாள்.

'சரி, கதையை சுருக்கமாகச் சொல்லி முடித்து விடுகிறேன், கேளு. துரியோதனனுக்கு துர்மந்திரி மாமா சகுனி. சகுனியின் சொல் தான் துரியோதனனுடைய காதுக்கு இனிப்பாய் இருந்தது. சகுனியினுடைய சொல்தான் துரியோதனனுடைய சபையில் எடுபட்டது. சூது களஞ்சியமான சகுனியின் சொல்லுக்கு ஏற்றமும், சாதுக்களஞ்சியமான விதுரனுடைய சொல்லுக்கு ஏமாற்றமும், விலை மதிப்பு ஏற்படலாமா? ஏ! துரியோதனா! நீ சகுனியின் துர்ப்போதனையைக் கேட்டால், அழிந்து போய்விடுவாய். துரியோதனாதிகளின் கூட்டத்தை காப்பாற்ற வேண்டிய பொறுப்பு என்னுடையது. சகுனியின் பேச்சைக் கேட்காதே. பாண்டவர்கள் கேட்பதைக் கொடுத்துவிட்டு அவர்களுடைய நல்லுறவை சம்பாதித்துக்கொள். கெடுபுத்தி கொண்டு அழிந்து போகாதே என்று மகாத்மா விதுரன் சொன்னது துரியோதனாதிகளின் சபையில் எடுபட்டதா? எனக்கு ஸ்வாரஸ்யமாக எழுத தெரியாமலிருக்கலாம். ஆனால் உண்மையை புரட்டிச் சொல்ல என்னாலே முடியாது. என் எழுத்துக்கு மார்க்கட்டு இல்லாமல் போனால் என்ன' என்று ஆசிரியர் ஆவேசத்தோடு முடித்தார்.

கதா காலட்சேபத்துக்கு சன்மானத்தைப் போல, உப்புமாவையும் காப்பியையும், அவருடைய மனைவி அவருக்கு எதிரிலே நொடிப் பொழுதில் கொண்டு வந்து வைத்தாள்.

---

## சிரிக்கத் தெரியுமா?

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

நகைச்சுவையிலே தாழ்ந்த ரகமும் உண்டு; உயர்ந்த ரகமும் உண்டு.

தினசரிப் பேச்சிலும் நம்மவர்களுக்கு ஹாஸ்ய உணர்ச்சி இல்லையென்று சொல்ல முடியாது. சம்பாஷணைகளிலும் ஹாஸ்ய உணர்ச்சி வெளிப்படும்; கதாகாலட்சேபங்களிலே பொங்கி வரும். பெண்களுடைய பேச்சிலும் நகைச்சுவையுண்டு; இது அப்பளக்கச்சேரிகளிலே அப்பளம் போல் பொரிந்து கொண்டிருக்கும். பாட்டிமார் பேச்சிலும், அவர்கள் சொல்லி வந்த கதைகளிலும் தான் நகைச்சுவைக்குக் குறைவுண்டா?

கதை சொல்லும் கலை ஆதியில் பேசும் கலையாகவே வளர்ந்திருக்க வேண்டும். அந்தக் கதாப் பிரசங்கங்களையும், நீண்ட புராணப் பிரசங்கங்களையும் ஜனங்கள் களைத்துப் போகாமல் அனுபவிக்க வேணுமேயென்று நவ ரஸங்களையும் கலந்து பரிமாறினார்கள்; ஹாஸ்யத்தையும் ஒரு கூட்டமுமாக அடிக்கடி பரிமாறி வந்தார்கள்.

பாட்டிமார்தான் பேரப்பிள்ளைகளுக்குப் பொழுது போக்காக எத்தனை கதைகளைச் சொல்லிவந்தார்கள்! எப்போதும் புராணக் கதைகளையும் பக்திக்கதைகளையும் தான் சொல்லிவந்தார்கள் என்று கருதுவது சரியன்று. புராண கதைகளையுங்கூட அப்படியே புராணங்களில் உள்ளபடி சொல்லி வந்தார்கள் என்று கருதுவதும் சரியன்று. எவ்வளவோ சொந்தச் சரக்கோடு, பழமையோடு புதுமை கலந்து—வியாசர் விருந்தைச் சொந்த வீட்டுவிருந்தாக்கி — சிறுவர்களுக்கு ஏற்ற முறையிலும், சில சமயங்களில் சிரிப்பை யுண்டாக்கும் முறையிலும், சொல்லி வந்தார்கள்.

குழந்தைகளுக்குச் சொல்லி வந்த விடுகதைகளிலும் போதுமான ஹாஸ்ய உணர்ச்சி கலந்திருந்தது. பாலர்களைச் சிரிக்கச் செய்யவே விநோத விடுகதைகள் நமது நாட்டிலே தொன்று தொட்டு வழங்கிவந்தன. சிரிப்பு-உணர்ச்சியும், சிரிக்கும் திறமும், பரிகசிக்கும் மனோபாவமும் சிறுவர்களுக்கு அதிகம் என்பதைத் தெரிந்துதான் அப்படிப்பட்ட விடுகதைகளையும் ஹாஸ்யக்கதைகளையும் நம்மவர் உண்டாக்கியிருக்கவேண்டும்; இன்னும் உண்டாக்கி வருகிறார்கள்.

## நகைச் சுவையும் சுதந்திரமும்

ஹாஸ்யபுத்தியும் பரிகாச புத்தியும் வயது முதிர முதிர மங்கிப் போகின்றன. வயிற்றுக் கவலை அதிகரிக்கும்போது வாழ்க்கையில் சுவை குறைந்து போகிறது; அப்போது நகைச்சுவையும் குறைந்துதானே போகும்? நமது நாகரிகம் எவ்வளவோ வயது முதிர்ந்த நாகரிகம் அல்லவா? நம்முடைய கஷ்டங்களுக்கும் கவலைகளுக்கும்தான் குறைவு உண்டா? மேலும் சுதந்திரம் இழந்த நாட்டிலே சிரிக்கும் சக்தியும் குன்றிப்போயிருக்குமல்லவா? உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கும் போதுதானே அந்த மகிழ்ச்சிப் பொங்கல் சிரிப்பாகவும் ஹாஸ்யமாகவும் வெளிப்படுகிறது? எனவே நமது நாட்டில் மேலை நாடுகளைப் போல் அவ்வளவு நகைச்சுவையில்லை என்பது உண்மை. ஆனால் இந்நாளிலும் நமக்கு நகைச் சுவையே கிடையாதென்று சொல்வது மூடத்தனம்.

"இந்தியாவும் நகைச்சுவையும் ஐஸ்லாந்தும் பாம்பும் போலேதான்! கிழடுதட்டிய இந்தியாவிலே..." என்றெல்லாம் அசடுதட்டப் பேசுவது பச்சை பசும் பொய்; சுத்த வெண்மையான மூடத்தனம். காந்தியடிகளின் அந்தப் பொக்கை வாய்ச் சிரிப்பிலே நகைச் சுவையில்லையா?

வயது முதிர்ந்து வந்த போதிலும் உள்ளம் இளமையாக இருக்க முடியும்! நம்முடைய பாட்டிமார்களும் அந்தக் காலத்தில் அப்படி யிருந்துதானே ஹாஸ்யக் கதைகள் சொல்லி வந்திருக்க வேண்டும்? விருத்தாப்பியம் உடம்பிற்குத்தான்; இதயத்திலே இருக்க முடியாது! வயது முதிர முதிர நல்லறிவாளர்களின் உள்ளம் மேலும் மேலும் இளமையாகவே வளர்ந்து வரும்; நூறு வயதுக் கிழவர் 'நூறு வயது இளைஞராக விளங்க முடியும்!

அப்படி வளர்ந்து வளர்ந்து உள்ளம் குழந்தைபோல் ஆகிவிடும்—ஆம்; ஒரு ஞானக் குழந்தைபோல் இருக்கும்.

அத்தகைய குழந்தையுணர்வில் ஹாஸ்ய உணர்ச்சிக்கும் விசேஷ இடம் உண்டு. இப்படியே, இந்தியாவின் வயது எவ்வளவோ முதிர்ந்து வந்தபோதிலும், இந்திய நாகரிகத்தின் இதயம் இளமையானது தான். எனவே ஹாஸ்ய ரஸத்தை அனுபவிக்கக் கூடியது தான்.

அடிமைத் தனத்தினுலும் பொருளாதாரக்கவலைகளாலும் ஹாஸ்ய அனுபவம் ஒருவாறு குறைந்திருக்கலாம். சுதந்திரம் பெற்றதும்,பழைய நகைச்சுவை மீண்டும் வந்து விடும், புதிய புதிய அனுபவங்களோடும், அறிவு ஆற்றல்களோடும் முதிர்ந்த பழுத்த அறிவாளி ஹாஸ்யத்தைக் குழந்தைபோல் அனுபவிக்க முடியும். நிம்மதியான ஆத்மாவே ஹாஸ்யத்தைப் பூர்ணமாக அனுபவிக்க முடி



யும்—என்று மேலை நாட்டு அறிஞர்களும் ஒப்புக்கொள்கிருர்கள். அதனுல் தானே நமது மகாத்மா ஒரு மகா புருஷராயிருப்பதுபோல் ஹாஸ்ய புருஷராகவும் நடந்துகொள்ளுகிருர்.

பழைய வேதாந்த சித்தாந்த உண்மைகளிலும், தொன்று தொட்டு வரும் நாகரிகப் பண்புகளிலும் ஊறிக் கிடக்கும் இந்தியா சுதந்திரம் பெற்றதும் நிம்மதியாக ஹாஸ்ய ரஸத்தை அனுபவிக்க முடியும். இப்போது கவலைகளாலும் அடிமைத்தனத்தினுலும் சுருங்கிப் பாட்டிபோல்த் தோன்றும் முகம், அப்போது சக்தி மயமான இளஞ்சிரிப்பினுல் மலர்ந்து ஜொலிப்பதை உலகம் பார்க்கும். இப்போது பரிகசிப்பவர்களும் தூஷிப்பவர்களும், அசட்டுச் சிரிப்புச் சிரிக்கிறவர்களும் அப்போது புறக்கணிக்க முடியாமல், "ஆஹா, இந்தியாவுக்கும் சிரிக்கத் தெரியும்!" என்று அந்தப் புதிய சக்திக்கு மரியாதை செலுத்துவார்கள்.

இன்று சுதந்திரத்தை அடைவதற்கும், அதற்காகக் கஷ்ட நஷ்டங்களை அனுபவிப்பதற்கும், தியாகங்கள் செய்வதற்கும், விசேஷ அரசியல் உணர்ச்சியோடு சிரிப்பு உணர்ச்சியும் சிரிக்கும் திறனும் அவசியமானவைதான். அந்த ஊற்று இன்னும் வறண்டுபோய் விடவில்லை. தூரெடுத்து ஊற்றுக்கண்களைத் துலக்கிவிட்டால், இந்த நிலையிலும் நகைச் சுவை பொங்கிவரக் கூடும். அத்தகைய நகைச்சுவை நமது அரசியல்-போராட்டங்களிலும் ஓர் அருந்துணையாகும்.

ஒரு காலத்தில் இந்தியா ஹாஸ்ய ரஸத்திலும் உலகத்திற்கு வழிகாட்டியது. பழைய நகைச்சுவைக் கதைகளில் முக்கியமானவை இங்கேயிருந்து தான் உலகத்தின் பல பகுதிகளுக்கும் யாத்திரைபோயிருக்க வேண்டுமென்று அறிஞர்கள் ஊகிக்கிருர்கள். சுதந்திர இந்தியா மறுபடி இந்தத் துறையிலும் எதிர்கால உலகத்திற்கு வழிகாட்டும் என்றுகூட நாம் எதிர்பார்க்கலாம்.

---




14

# ‘போய் விடுங்கள்’



வ. வேணுகோபாலன்

‘நான் ஏன் இங்குவந்தேன்? நான் செய்த தீவினைப் பயனே இந்த நிலையை நான் அடைந்ததற்குக் காரணம்; இந்த நகர்க் காட்சிகளைப் பார்க்க வந்த நான், வஞ்சக நெஞ்சகனாகிய இவ்வேந்தனை ஏனோ காதலித்தேன்? இவனுக்கு மனைவி உண்டு என்பதை முன்பே நான் உணரவில்லையே! உணர்ந்திருப்பேனானால் இவ்விதத் துயரம் நான் ஏன் அடையப் போகிறேன்? உண்மையைச் சிறிதும் நான் அறியாதவாறு என்னை வஞ்சித்து, இன்னும் என்னுடன் குலாவி வருகிறானே, இவ்வேந்தன்! என்ன ஆச்சரியம்! தமிழகத்திலே பெரும் பகுதியை ஆண்டுவரும் முடிவேந்தனுக்கு உரியவளானேன் என்று பெருமைகொண்டேனே! எல்லாம் பகற்கனவாயிற்றே! நாகநாட்டு முடிமன்னனின் புதல்வியாகிய நான், ஓர் அரசனுக்கு இரண்டாவது காதலியாக—வெறும் காமக்கிழத்தியாக வாழ்வதென்றால் உலகம் பழிகூறாதோ? செல்வத்துடன் உயிரினும் பெரிதாக மதித்து என்னை வளர்த்த என் தாய் தந்தையரின் மனம், இதை யறிந்தால் தீவாய்ப்பட்ட புழுப்போல் துடிக்குமே! என் தந்தையின் மனம் பதைபதைக்குமே! அந்தப் பெண்கள் காவிரிக்கரையில் நின்று என்னை இகழ்ந்து கூறிய வார்த்தைகள் இன்னும் என் காதுகளில் ஈட்டிபோல் பாய்ந்தவாறே உள்ளன! அவர்கள் நகைத்துக் கூறிய சொற்கள் என் இருதயத்தைப் புண்ணாக்கி விட்டன! அரசகுலத்து இளநங்கையாகிய நான், முதல் மனைவியுடன் குலாவியிருக்கும் ஓர் அரசனின் வேட்கைப் பசிக்கு விருந்தாக இருப்பதைக் கண்டு, அப்பெண்கள் எள்ளி நகையாடியதில் வியப்பே இல்லை; அவர்கள் நான் உள்ள அளவும், இந்தச் சோழன் உள்ள அளவும் நகையாடிக் கொண்டிருந்தாலும் அது வியப்பாகாது; உயர்வும், ஜீவனும் இல்லாத, வெறும் காம உணர்ச்சிக்கு அடிமையான என் காதலின் விசித்திரத்தைக் கண்டு இவ்வுலகமே சிரித்தாலும் அது ஒரு வியப்பா? ஆ! நான் எவ்வளவு மகோன்னதமான நிலையிலிருந்து, மிகத் தாழ்ந்த படுகுழியில் வீழ்ந்தேன்! இனி முகர்ந்து கசக்கி எறியப்பட்ட ஒரு பூவைப் போன்றவள்தானே நான்! இந்தச் சோழனிடம் ஏனோ என் மனம் சென்று கலந்தது! என் நிலையைக் கண்டு என் உள்ளமே பரிகசிக்கும்போது, பிறர் நகைப்பதற்குக் கேட்பானேன்? தரும முதல்வா! போதிநாதா! என்னை இவ்வாறு ஆக்கியதும் உன் விருப்பமோ! சோழவேந்தனை நான் இனி எவ்வாறு என் கண்கொண்டு பார்ப்பேன்! எவ்வாறு அவனைத் தீண்டுவேன்!’—இவ்விதச் சிந்தனையில் மனம் கலங்கியவளாய் நாககன்னிகை மஞ்சத்தில் அமர்ந்திருந்தாள். அவளுடன் சேடி, கந்தியும் இருந்தாள்.

### நாக்கன்னிகையின் கவலை

கிள்ளியின் வஞ்சனையை எண்ணி உள்ளம் உருகினாள். நீலன் வருகையை எதிர்பார்த்து, உண்மையைத் தெளிவாக அறிந்துகொள்ள ஆவல் கொண்டாள். மேற்கொண்டு இன்னது செய்வதென்றே தெரியாமல் கலங்கினாள். அரண்மனையில் உள்ளவற்றைக் காண்பதற்கு முடியாதவாறு தன்னை ஏமாற்றி வந்ததும், நீலனிடம் தனக்கு வெறுப்பு உண்டாகும்படி அவன் மீது கோள் கூறி வந்ததும் சாரனைச் சிறை செய்வித்ததும்—யாவும், தன்னை வஞ்சிக்கவே கிள்ளி செய்திருக்கிறான் என்று அவள் எண்ணினாள்; தனக்கு மனைவி இருப்பதை அறிந்து கலகமூட்டுவானோ என்ற எண்ணத்தாலேயே நீலன் மீது அவன் குறைகூறி வந்திருக்கிறான் என்று கருதினாள். தான் இனி என்ன செய்வது? தன்னுடைய விபரீதக் காதலைக் கேட்டுத் தாய்தந்தையர் என்ன நினைப்பார்கள்? தான் அடைந்துள்ள பழியிலிருந்து இனி எப்படி மீள்வது?—என்ற கவலைகள் உண்டாயின.

இந்நிலையில் அவ்வறையில் இருவர் தோன்றினர். அவர்களைக் கண்டதும் நாககன்னிகை துணுக்குற்று நோக்கினாள். ஒருவன் நீலன்; மற்றவன் காவிதி திருக்கண்ணன் என்பவன். புதிதாகத் தோன்றின அத்திருக்கண்ணனை வெறித்துப் பார்த்தாள்.

“நீலா, இவர் யார்?” என்றாள்.

“இவர் பெயர் காவிதி திருக்கண்ணன்; இந்நகரில் நடுவி

லுள்ள நாளங்காடியின் காவலர் தலைவன்" என்றான். நீலனின் முகத்தில் அமைதி குடிகொண்டிருந்தது; முன்பிருந்த பொலிவு இல்லை. அவனைக் கண்டவுடன் நாககன்னிகையின் துயரம் மீட்டும் மிகுதிப்பட்டது; கண்களில் நீர் ததும்பியது.

### திருக்கண்ணன் கூறிய தகவல்

"இவர் இங்கு வந்த காரணம்?" என்றாள் மெல்ல.

"உனக்கு உண்மையை நிரூபிக்கத்தான் அழைத்து வந்தேன். இவர் மூலமாக இன்னும் ஒரு புதிய ரகஸ்யம்..."

"என்ன அது?" என்று ஆவலோடு கண்ணீர் ததும்பக் கேட்டாள். நீலன் திருக்கண்ணனை குறிப்பிட்டுவிட்டு மௌனமாக நின்றான்.

"ஐயா, நான் கேட்பதற்கு மட்டும் மறுமொழி தந்தால் போதும். உங்கள் அரசருக்கு எப்போது கல்யாணமாயிற்று?"

"கல்யாணமாகி ஐந்து வருஷங்களுக்கு மேல் இருக்கும்."

"அரசியின் பெயர் என்ன தெரியுமா?"

"இராசமாதேவி; சீர்த்தி என்று சொல்வார்கள்; மாவலி வம்சத்திலே அவள் பிறந்தவள்"

"அவளைப்பற்றி வேறு விசேஷங்கள் உண்டோ?"

"அவள் நன்றாகப் படித்தவள்: அரசருக்கு அவளிடம் அளவற்ற அன்பு உண்டு. அந்தத் தேவிக்கு ஒரு குமரனும் இருந்து வருகிறான்; சிறுவயசு."

"உங்கள் அரசர் மனைவிக்காக குமரன் இருக்கிறான்?" நாககன்னிகை பதைபதைத்தாள். ஒரு கணத்தில் நா வறண்டது. வேறு வார்த்தை கூறவில்லை நீலனை மருண்டு நோக்கினாள்

"புதிதாக தெரிந்து கொண்டது இதுதான்" என்றான் நீலன். நாககன்னிகை முகம் வசிகரம் கொண்டது, அவளுடைய பார்வையும், இதழ்களின் அசைவும் அவள் ஏதோ உறுதி செய்ததைப் புலப்படுத்தின; கண்களிலிருந்து, தேங்கியிருந்த நீர்த்துளிகள் சிதறின.

### சோர்வு நீங்கினாள்

"ஐயா, மிகவும் நன்றி; தாங்கள் போய்வரலாம்" என்றாள்.



"என் பெயர் மாய்ந்ததாக எண்ணுங்கள்; போய் விடுங்கள்" என்று கூறியவாறே அப்புறம் சென்றாள்.

"அம்மா, யாரிடமும் நான் கூறியதாகக் குறிப்பிட வேண்டாம்" என்று சொல்லியபின் அவன் அவ்விடம் விட்டுச் சென்றான். நீலன் நாககன்னிகையின் முகத்தோற்றத்தைக் கண்டு மௌனமாக ஒருபுறம் அமர்ந்தான். நாககன்னிகை அவனை நோக்கினாள். என்றும்போல் அவன் தலைகுனிந்து அவள் கட்டளையை எதிர்பார்த்திருந்தான்.

"நீலா, இன்று தான் நீ பழைய நீலன் போல் தோன்றுகிறாய்! நாம் இந்நகருக்கு வந்து எவ்வளவு நாட்கள் ஆகின்றன தெரியுமா?"—நாககன்னிகையின் குரலில் முன்பிருந்த சோர்வு இல்லை.

"ஒரு மாதத்திற்கு மேல் ஐந்து நாட்கள் ஆகின்றன" என்றான் வியப்போடு. அவன் கண்கள் ஆவலோடு அவளை நோக்கின.

"ஒருமாதமும் ஐந்து நாட்களும் இன்றோடு முடிகிறது அல்லவா? நீலா, நேற்றுவரையில் ஒரு மாதம் ஒரு வாரம் போல் தோன்றியது எனக்கு. ஆனால் இன்றே, எத்தனையோ வருஷங்கள் போல் தோன்றுகிறது; என் வாழ்வின் உதய காலம் போய், நெடுநாட்களுக்குப் பின்பு வரவேண்டிய அஸ்தமனகாலம், இன்று இம்மாலைக்

காலத்திலேயே வந்துவிட்டதாக எண்ணுகிறேன்.''

''பீலி; நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை,'' என்ருன் நீலன்.

''எல்லாவற்றையும் விளங்கும்படி, இன்றிரவு நடுக்கடலிலே விரிவாகச் சொல்கிறேன்; இனி தாமதம் வேண்டாம்; இன்றிரவு நடு யாமத்திலே, பிறர் அறியாமல் நமது பரிவாரங்களுடன் புறப்பட்டு, நம் நாட்டுக்குப் போக வேண்டும்; விரைவில் எல்லாவற்றையும் ஆயத்தம் செய்; நாம் புறப்படுவது ஒருவருக்கும் தெரிய வேண்டாம்.''

### கந்தியின் திகைப்பு

நாக கன்னிகையின் வார்த்தையைக் கேட்டு நீலன் குதூகலித்தான். ''பீலி, நான் கருதியதை நீயே சொல்லி விட்டாய்; யாவற்றையும் ஆயத்தம் செய்ய வேண்டியது என் கடமை; இதோ போகிறேன்'' என்று அம்பு போல் கடுகிச் சென்ருன். நாக கன்னிகை சொல்லியதையும், நீலன் போவதையும் கண்ட கந்தி திகைத்தாள்.

''பீலி, என்ன இது? உன் யோசனை நேர்மையா?'' என்ருள்.

''ஏன்? நீ என்ன சொல்கிருய்?''

''அரசர்களின் இயல்பு...''... அதோ அவர் ''என்று கந்தி, கிள்ளி வருவதை நாக கன்னிகையிடம் உணர்த்தினுள். அதைக் கேட்டதும், நாக கன்னிகையின் உடல் ஒரு கணம் சிலிர்த்தது: இருதயம் துடித்தது சற்று துணிவுடன், பார்ப்பதற்குப் பதுமை போல் அசைவற்று இருந்தாள்.

'கிணின் கிணின்' என்று ஒலி கேட்டது. தேரை விட்டு இறங்கி மிக விரைந்து நாககன்னிகை இருக்குமிடம் வந்தான். அவன் கண்ட காட்சி-அவனைத் திடுக்கிடச் செய்தது.

''நாக கன்னிகை!'' என்ருன். அவள் அருகில் சென்ருன். நாக கன்னிகையின் முகம் சற்றும் அவனை ஏறெடுத்து நோக்கவில்லை. திகைப்பும் பதற்றமும் கொண்டான் அரசன்; அவளைத் தொடுவதற்கு முற்பட்டான்.

''நாககன்னிகை.'' என்று அனுகினுன்.

### கிள்ளியின் வருகை

''ஐயா, சற்று அகலவே இருங்கள்; தங்கள் பட்டத்துத் தேவியின் பணிப் பெண்ணுக இருக்க நான் தகுதியுடையவள் அல்ல! தங்களுடைய காமக் கிழத்தியாக இருக்கவும் நான் தகுதியுடையவள் அல்ல. தங்களுடன் மகிழ்ந்திருப்பதற்கு, அவள் போல், அழகும் சிறப்பும் அறிவும் உடையவள் நான் அல்ல! வீணுக என்னை நினைந்து வருந்தாமல் அவளுடனே இருங்கள்; தாங்கள் போய் வரலாம்''—நாக கன்னிகையின் வார்த்தைகள் மேன்மேல் விரிவடைந்து கொண்டே இருந்தன. அவள் கண்ணிலிருந்து நீரும் பெருகிக்கொண்டே இருந்தது.

நெடு முடிக் கிள்ளி உண்மை உணர்ந்து நிலை கலங்கினுன். என்ன சொல்வதென்று திகைத்தான். அவனுடைய பூரித்த தோள்கள் குழைந்தன. அவளை அணுக முடியாதவனுய் அஞ்சினுன். நாக கன்னிகையின் பார்வை அறை பொறி சிதறின. கிள்ளியை கண் சுழல நோக்கினுள்; ''ஐயா, நீர் ஓர் அரசனே! நெறி தெரிந்த முடி மன்னனே! நான் ஓர் அரச குலத்து நங்கை என்பதை மறந்தீரோ? ஒரு மனைவியைப் பெற்று அவளிடம் ஒரு குமரனையும் பெற்று அதன் பின்பு ஓர் அரசிளங் கன்னியை அவள் வாழ்வைக் கெடுக்கும்படி, உங்கள் அரச நீதி சொல்கிறதோ? ஐயா! இதன் விளைவு உம்மை என்ன செய்யும் என்பதை அறியாமல் போனீரே! போய் வாருங்கள்! இனி தங்கள் தொடர்பு எனக்கு விரும்பத்தக்கதல்ல''—நாககன்னிகை தீவிர வேகத்தோடு பேசினுள்.

மன்னவன் மண்டியிட்டு நாக கன்னிகை முன் அமர்ந்தான். அவள் முகத்தை ஏறிட்டு கண்ணீர் துளிக்க நோக்கினுன்.

### நாககன்னிகைக்கு ஆறுதல்

''நாககன்னிகை! பிழையைப் பொறுத்துக்கொள்! இதற்கு இவ்வளவு கோபம் கொள்ளுதல் தகுமா? நீ அறியாதது என்ன இருக்கிறது? அரசர்களின் நெறிக்கு இது புறம்பானதல்ல! இதை நீயே அறிவாய்! இந்த நகரமே, உன் உரிமைக்கு உடையதுதான்; அவ்விதமிருக்க, உனக்கு எவ்விதத்தில் குறை? முன்பு ஒருத்தியை நான் மணந்துவிட்டதால் நீ எவ்விதத்தில் குறையுடையவள் ஆவாய்? நாககன்னிகை; நான் செய்தது தவறல்ல; நான் உன்னிடம் உண்மையைமறைத்ததற்கு என்னை மன்னித்துவிடு; என் உயிராக மதித்து வரும் உன்னை, இந்நகரம் எந்நாளும் கொண்டாடும். கோபத்தால் என்னை வருத்துவது நியாயமா?...'' என்றவாறு ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லலானுன் நெடுமுடிக்கிள்ளி.

நாககன்னிகையின் கோபம் மிகுதியாயிற்று. நெடுமுடிக் கிள்ளியைப் பார்க்கப் பார்க்க மனம் கொதித்தாள். உடல் சிலிர்த்தாள். வார்த்தைகள் கூற முடியாதவளாய்ப் பெருமூச் செறிந்தாள்.

''ஐயா, போதும்; உங்கள் நீதி, நியாயம், பேச்சு எல்லாம் உங்கள் போன்றவர்களுக்கே தகும்; ஆனல் என்போன்ற மான உணர்ச்சியுள்ளவர்கள் அதை ஏற்றுக்கொள்ளவே முடியாது! உங்கள் மீது குற்றமில்லை; என் மீதே குற்றம்; என் வாழ்வை மிகக் கீழான நிலைக்கு கொண்டு சென்றவள் நானே! மனம் அழிந்து, மதிமயங்கி, நாணத்தையும் விட்டு, உங்களிடம் யான் காதல்கொண்டது ஊழ்வினையின் செயல்! இதுகாறும் நாம் மகிழ்ந்திருந்தது முற்பிறப்பில் செய்த வினைப்பயன்! ஐயா! தாங்கள் இங்கு நிற்கவேண்டாம் போகலாம்! என் இருதயத்தைப் புண்ணுறுத்தி என் வாழ்வை வீண் செய்து இன்னும் என் முன் நின்று என்னை வருத்தவேண்டாம்....'' என்று எழுந்தாள். கோபத்தால் அவள் அங்கமெல்லாம் துடித்தன. கண்களும் கன்னமும் சிவந்து விம்மின; அவளைப் பார்ப்பதற்கும் அஞ்சினுன் நெடுமுடிக்கிள்ளி. மீட்டும் வார்த்தை கூறுவதற்கு நடுங்கினுன்.

''நாககன்னிகை;'' என்ருன்.

''என் பெயர் மாய்ந்தநாக என்னுங்கள்; போய் விடுங்

—அடுத்த பக்கம்

## 'இப்படி நடக்குமானல்...!'

(8-ம் பக்கத்தொடர்ச்சி)

விளையாட்டு விளையாடராராம். இதெல்லாம் என் காதிலே விழறது. உங்கப்பாவைக் கண்டித்து உடனே கடிதம்போடு. மறந்தே போயிட்டேனே. உள்ளே மூலையிலே நார்த்தங்காயும், எலுமிச்சங்காயும் ஊருகா போட்டு வச்சேன். அதை எடுத்து வெயிலில் வை. ஆத்தை ஜாக்கிரதையாய்ப் பாத்துக்கோ. எனக்கு பார்ஸி டான்ஸ், பரத நாட்டியம் எல்லாம் சொல்லித்தரா. எனக்கு இதெல்லாம் ஒண்ணும் பிடிக்கவே இல்லே. ஆசாரம் கீசாரம் ஒண்ணும் இங்கே கிடையாது; முள்ளு மேலே இருக்காப் போலே, இருக்கு. உன் உடம்பை ஜாக்கிறதையாய்ப் பாத்துக்கோ. அப்பாவுக்கு ஒழுங்காக இருக்கச் சொல்லிக் கடிதம் போடு.

அம்மா

* * * *

'தந்தி'

கிட்டுவுக்கு:-

அம்மா எழுதியதை எல்லாம் நம்பாதே. காதல்கீதல் ஒண்ணுமில்லே. கிராப் மட்டும் வைத்துக் கொண்டேன். உடனே பணமும் பொடியும் அனுப்பு. இனி என்னல் பொறுக்க முடியாது. உடனே அனுப்பு. இந்த வருஷத்தோடு படிப்பும் போதும்.

'அப்பா'

கிட்டுவுக்குத் தாங்க முடியாமல் சிரிப்பு வரவே 'களுக்' என்று சிரித்து விட்டான். இதை அப்பாவும் கேட்டு விட்டார்.

"ஏண்டா கழுதே பரீட்சைலே 'சுழி' வாங்கிண்டு சிரிப்பு வேறயா? சிரிப்பு! என்னத்தைக் கண்டுடா இப்போ உனக்கு ஆனந்தம்......" என்று கேட்கும் அப்பாவிற்கு அவன் என்ன பதில் சொல்வான்?

——

(முன் பக்கத் தொடர்ச்சி)

கள்'' என்று கூறியவாறே அப்புறம் சென்ருள்.

கிள்ளி சற்று ஆலோசித்தான்; அவள் கோபம் தணியாததைக் கண்டான். கண்ணீர் ததும்ப கோபத்தால் துடித்து நிற்கும் அவளை அணுகாதவனுய்த் தடுமாறினன். அப்போது அவளிடம் பேசுவதற்கில்லை என்று துணிந்தான். பேரிரக்கத்தோடு ஒருமுறை அவளை நோக்கிவிட்டுத் தயங்கித் தயங்கி மெல்ல மேன்மாடத்தை விட்டு வெளியேறினன். போய்விடும்படி அவள் சொல்லியதை நினைந்து நினைந்து பொருமியவனய்ச்சென்ருன்.

(தொடரும்)

சிறுவர் கதை

# காரின் சுயசரிதை

*

(லலிதாதேவி)

ஸ்ரீமதி லலிதா, ஸ்ரீமதி தங்கம்மாள்பாரதியின் பெண்; கவி அரசர் பாரதியாரின் பேத்தி. மோட்டார்கார் சொன்ன கதை யொன்றைச் சிறுவர்களுக்காக எழுதியிருக்கிருள். தன் சுய சரிதையை மோட்டாரே சொல்வதாகக் கதை அமைந்திருக்கிறது.

எங்கள் வீட்டில் ஒரு மோட்டார் உண்டு. எங்களுடைய அப்பாவுக்கு சிங்கப்பூரில் உத்தியோகம். ஆதலால் நாங்கள் அங்கு குடி இருந்தோம். சிங்கப்பூரில் அநேக பார்க்குகள், அவசியம் பார்ப்பதற்குரிய அழகான இடங்கள் எல்லாம் இருந்தன. ஒரு நாள் ஏதோ ஒரு அழகிய ஸ்தலத்தை, பார்ப்பதற்காக நான் என் தம்பி, தங்கை, அப்பா, எல்லோருமாக எங்கள் வீட்டு மோட்டார் காரில் ஏறிக் கொண்டு போனேம். மோட்டார் அந்த இடத்தை அடைந்ததும் நாங்கள் எல்லாரும், மோட்டாரிலிருந்து கீழே இறங்கினேம். எங்கள் அப்பா, எங்களிடம் 'நீங்கள் இங்கு எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருங்கள் நான் ஒரு இடத்திற்குப் போய் விட்டு வருகிறேன்' என்று சொல்லிப் போய் விட்டார். உடனே மோட்டார் எங்களைக் கூப்பிட்டு, "என்னுடைய சுய சரிதையைச் சொல்கிறேன் கேளுங்கள்" என்று தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தது. அது சொன்ன கதை பின்வருமாறு:—"நான் ஒரு அழகிய மோட்டார்கார். என்னுடைய நிறம் நீலம். எப்பொழுதும், குழந்தைகளுக்கு நீலம் என்றாலே பிடிக்கும். என்னைக் கண்டதும் குழந்தைகள், மகிழ்ச்சியுடன் ஓடி வருவார்கள். ஒரு நாள் நான் இல்லாவிட்டால், அவர்களால் இருக்க முடியுமா? ஒருக்காலும், முடியவே முடியாது. தினந்தோறும், காலையிலும், மாலையிலும், நான் அவர்களுக்கு அவசியம் வேண்டியிருக்கும். ஏதாவது ஒரு 'அர்ஜென்ட்' சமாசாரமாயிருந்தாலும் அல்லது யாருக்காவது, உடம்பு சரியில்லாமல்

## கண்டதும் கேட்டதும்

(15-ம் பக்கத்தொடர்ச்சி)

சபாஷ்! என்று சொல்லி உற்சாகப்படுத்துவார். இது அவரது வழக்கம். அவரைப் போலவே அவரது பாட்டை அன்று கேட்ட ரஸிகர்கள் எல்லோரும் "பேஷ்! பேஷ்! மகராஜபுரம்! சபாஷ்!" என்று சொல்லிக்கொண்டே போனதைக்கவனித்தேன். அதோடில்லாமல் அடுத்தவருஷம் சென்னை சங்கீத வித்வத்சபையில்18-வது சங்கீத மகாநாட்டுக்குச் சிறந்த அபேட்சகர் மகாராஜபுரம் என்று சிலர் பேசிக்கொண்டனர். "ததாஸ்து" ரொம்பப் பொருத்தம் என்றே தோன்றியது இந்த விஷயம். வித்வத் சபையாருக்கு இதைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

கள் முகத்தை என்னுடலில் கண்டதும் சந்தோஷத்தால் குதித்து, என்னைத் தடவி தடவிப் பார்ப்பார்கள்.

தினந்தோறும் குழந்தைகள் சாயந்திரம் என் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு ஹை-க்ரௌண்டுக்கு போவார்கள். இல்லாவிடில் ஸினிமாவுக்குப் போவார்கள். இதர கார்களை ஓட்டுவதற்கு 'தனி' ஆள்கள் வைத்திருப்பார்கள். ஆனல், என்னை என்னுடைய எஜமானரே தான் ஓட்டுவார். என்னுடைய விலை என்ன தெரியுமா? 3000 ரூபாய். எனக்கு எங்கவீட்டில் அவ்வளவுசெல்வாக்கு இருந்தது! பணக்காரர்களால் தான், என்னை வாங்க முடியும். மற்றப்படி ஏழை, எளியவர்கள் என்னை லேசில் வாங்கிவிட முடியாது. கொண்டு போனல், காற்று ஜில்லென்று வீசும். சுகமாகத் தூக்கம் வரும். எங்க எஜமானருக்கு, ஏதாவது ஒரு ஊருக்குப் போக வேண்டுமானல் 'ரயில்' தான் வேண்டுமென்று அவசியமில்லை. நான் ஒரு நிமிஷம் கொண்டு போய் விட்டு வந்து விடுவேன். என் கூட்டாளிகளோடு பந்தயம் போட்டால் நான் தான் ஜயிப்பேன். நான் ஒரு நாளும் உங்களைப்போல் வேலை செய்வதற்கு சலிக்கமாட்டேன். இதனுல்தான், எல்லாருக்கும் என்னைக் கண்டால் பிடிக்கிறது. நான் இல்லாமல் ஒரு நாள் இருந்து பாருங்கள் பார்க்கலாம்'' என்று மோட்டார், தன்னுடைய சுய சரிதையை எங்களிடம் சொல்லி முடித்தது. உடனே அப்பாவும் வந்தார். திரும்பவும் அப்பா நாங்களெல்லாரும் காரில் ஏறிக் கொண்டு, வீட்டிற்கு சென்றோம்.

## "நாரதர்" ஆண்டுமலர்

★

'நாரதர்' ஆண்டுமலர் இவ் வருஷம் வனப்பும் சோபையும் கொண்டு வெளிவந்திருக்கிறது. இவ்வாரப் பதிப்பு தோன்றி 11 வருஷங்கள் ஆகின்றன. பலவிதமான வர்ணங்களில் நல்ல காகிதத்தில் சிரத்தையுடன் தயாரிக்கப்பட்டிருக்கும் இம்மலரில் கதைகளும், கட்டுரைகளும் அடங்கியிருக்கின்றன. ஸினிமாத் துறையில் முன்னணியில் நின்று பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களின் படங்களும் மலரில் நிறைந்திருக்கின்றன. கவர்ச்சி மிகுந்த வர்ண வேலைப்பாடுகள் மலருக்கு மணம் உதவியிருக்கின்றன. நாட்டியக்கலை வளம் பெற்று வருவதைக் குறிக்கும் வண்ணம் சில நாட்டியத் தோற்றப் படங்களும் பிரசுரமாயிருக்கின்றன. இவ்வளவும் ஒன்று கூடிய இம் மலரின் விலை ரூ. 2.

சிறுவர் கதை

# காரின் சுயசரிதை

(லலிதாதேவி)

ஸ்ரீமதி லலிதா, ஸ்ரீமதி தங்கம்மாள்பாரதியின் பெண்; கவி அரசர் பாரதியாரின் பேத்தி. மோட்டார்கார் சொன்ன கதை யொன்றைச் சிறுவர்களுக்காக எழுதியிருக்கிருள். தன் சுய சரிதையை மோட்டாரே சொல்வதாகக் கதை அமைந்திருக் கிறது.

எங்கள் வீட்டில் ஒரு மோட்டார் உண்டு. எங்களுடைய அப்பாவுக்கு சிங்கப்பூரில் உத்தியோகம். ஆதலால் நாங்கள் அங்கு குடி இருந்தோம். சிங்கப்பூரில் அநேக பார்க்குகள், அவசியம் பார்ப்பதற்குரிய அழகான இடங்கள் எல்லாம் இருந்தன. ஒரு நாள் ஏதோ ஒரு அழகிய ஸ்தலத்தை, பார்ப்பதற்காக நான் என் தம்பி, தங்கை, அப்பா, எல்லோருமாக எங்கள் வீட்டு மோட்டார் காரில் ஏறிக் கொண்டு போனேம். மோட்டார் அந்த இடத்தை அடைந்ததும் நாங்கள் எல்லாரும், மோட்டாரிலிருந்து கீழே இறங்கினேம். எங்கள் அப்பா, எங்களிடம் 'நீங்கள் இங்கு எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருங்கள் நான் ஒரு இடத்திற்குப் போய் விட்டு வருகிறேன்' என்று சொல்லிப் போய் விட்டார். உடனே மோட்டார் எங்களைக் கூப்பிட்டு, "என்னுடைய சுய சரிதையைச் சொல்கிறேன் கேளுங்கள்" என்று தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தது. அது சொன்ன கதை பின்வருமாறு:—"நான் ஒரு அழகிய மோட்டார்கார். என்னுடைய நிறம் நீலம். எப்பொழுதும், குழந்தைகளுக்கு நீலம் என்ருலே பிடிக்கும். என்னைக் கண்டதும் குழந்தைகள், மகிழ்ச்சியுடன் ஓடி வருவார்கள். ஒரு நாள் நான் இல்லாவிட்டால், அவர்களால் இருக்க முடியுமா? ஒருக்காலும், முடியவே முடியாது. தினந்தோறும், காலையிலும், மாலையிலும், நான் அவர்களுக்கு அவசியம் வேண்டியிருக்கும். ஏதாவது ஒரு 'அர்ஜென்ட்' சமாசாரமாயிருந்தாலும் அல்லது யாருக்காவது, உடம்பு சரியில்லாமல்

## கண்டதும் கேட்டதும்

(15-ம் பக்கத்தொடர்ச்சி)

சபாஷ்! என்று சொல்லி உற்சாகப்படுத்துவார். இது அவரது வழக்கம். அவரைப் போலவே அவரது பாட்டை அன்று கேட்ட ரஸிகர்கள் எல்லோரும் "பேஷ்! பேஷ்! மகாராஜபுரம்! சபாஷ்!" என்று சொல்லிக்கொண்டே போனதைக்கவனித்தேன். அதோடில்லாமல் அடுத்தவருஷம் சென்னை சங்கீத வித்வத்சபையில்18-வது சங்கீத மகாநாட்டுக்குச் சிறந்த அபேட்சகர் மகாராஜபுரம் என்று சிலர் பேசிக்கொண்டனர். "ததாஸ்து" ரொம்பப் பொருத்தம் என்றே தோன்றியது இந்த விஷயம். வித்வத் சபையாருக்கு இதைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

# பால்கன்-ஜீ-பாரீ



அன்பார்ந்த
சகோதர சகோதரிகளே!

சென்ற வாரம் சகோதரன் கணி கொடுத்திருந்த புதிரின் விடையைக் கண்டு பிடித்தீர்களா? அதன் சரியான விடை இதுவே—"கோபு மாடியிலிருந்து 7 கோலிகள் எடுத்துக் கொண்டான்."

* * * *

## மிகப் பெரிய மணி

எல்லோரும் மணிகளைப் பார்த்திருக்கிறீர்கள். அவற்றின் ஓசையைத் தினந்தோறும் கோயில்களிலும் மற்றிடங்களிலும் கேட்கிறீர்கள். ஆனால், அவற்றை விடப் பன மடங்கு பெரிதானவையும், 40,000, 50,000, ராத்தல்கள் எடையுள்ளவையும் உலகில் இருக்கின்றன.

இங்கிலாந்தில், லண்டன் மா நகரத்திலுள்ள ஸெயின்ட் பால்ஸ் காதீட்ரல் என்னும் மாதா கோயிலில் உள்ள மணியின் எடை 17½ டன். சீனாவில் நான்கிங் நகரத்தில் 22 டன் எடையுள்ள ஒரு மணி இருக்கிறது. பீக்கிங் நகரத்தில் 53 டன் எடையில் மணி ஒன்று இருக்கிறது.

உலகத்திலுள்ள எல்லா மணிகளிலும் பெரிது ரஷ்யா நாட்டின் தலை நகராகிய மாஸ்கோ நகரத்தில் இருக்கிறது. அதன் எடை 198 டன்; அதாவது 4,43,520 ராத்தல்கள். அதன் உயரம் 19 அடி. அதன் வாயின் சுற்றளவு 60 அடி. அந்த மணி 1653-ம் வருஷத்தில் செய்யப்பட்டது. ஆனால் அது அதிக நாட்கள் உபயோகத்தில் இருக்கவில்லை. ஏனென்றால் ஒரு தீ விபத்தில் அது கீழே விழுந்து பூமிக்குள் புதைந்து போயிற்று. அந்நிலையில் அம்மணி பல ஆண்டுகளாகக் கிடந்தது. பிறகு 1837-ல் ரஷ்யச் சக்ரவர்த்தி நிகோலஸ் அதைப் பூமியிலிருந்து வெட்டியெடுத்து ஒரு மேடையின் மீது வைக்கச் செய்தார். இப்பொழுது அந்த அதிசய மணியின் உள்பாகம் ஒரு ஜப ஆலயமாக உபயோகிக்கப்பட்டு வருகிறது.

மாஸ்கோவில் வேறொரு பெரிய மணியும் உபயோகத்தில் இருந்து வருகிறது. அது 128 டன் எடையுள்ளது.

* * * *

## பத்து நிமிஷப் பரீக்ஷை

உங்கள் பொது அறிவைப் பரீட்சிப்பதற்காக இந்தப் பரீட்சை. இதற்கு சமயம் 10 நிமிஷம். மொத்தம் மார்க்கு 20. வாரப்பதிப்பில் சரியான விடைகள் பிரசுரமாகும் அப்பொழுது நீங்களே மார்க்கு போட்டுக் கொள்ளலாம்.

(1) ஒரே தினத்தில் பிறந்த இந்தியப் பெரியோர் இருவர் யாவர்?

(2) டாலர், யென், மார்க் ரூபின் இந்நாணயங்கள் எந்த நாடுகளில் உபயோகிக்கப் படுகின்றன?

(3) உலகத்திலேயே மிகவும் நீளமான நதி, உயரமான கொடு முடி, விஸ்தீரணமான நகரம் யாவை?

(4) நல்வழி, நாலடியார், வெற்றிவேற்கை இவற்றை அருளிச் செய்தவர் யார்?

(5) 1. நீறில்லா நெற்றி பாழ், நெய்யில்லா வுண்டி பாழ், ஆறில்லா ஊருக் கழகு பாழ்—விற்பிடித்து,

2. நீர் கிழிய எய்த வடுப் போல மாறுமே, சீரொழுகு சான்றோர் சினம்.

-இவ்வடிகள் எந்த நூற்களிலிருந்து எடுக்கப் பட்டுள்ளன?

(6) படகுகளில் ஏன் சாயம் பூசுகிறார்கள்?

(7) உதய சங்கர், ஜகதீஷ் சந்திர போஸ், காளிதாஸன், ராமானுஜன், அவனீந்திர நாத் டாகூர்-இவர்கள் எந்தத் துறைகளில் புகழ்பெற்றவர்கள்?

* * * *

## எண்கள் காட்டும் வேடிக்கை

64253 × 365 = 2345 2345.
273863 × 365 = 9995 9995.

இந்தப் பெருக்கல் தொகைகளில் முதல் நான்கு ஸ்தானங்களில் வரும் எண்களே பின் நான்கு ஸ்தானங்களில் மீண்டும் வருகின்றன.

13452 என்ற எண்ணிலுள்ள வேடிக்கையைப் பாருங்கள். இதில் 1 முதல் 5 வரையுள்ள எண்கள் இருக்கின்றன. அது மாத்திரமா? முதலாவதாக வரும் 13-ஐ பின்னால் வரும் 4-ல் பெருக்கின தொகை அதாவது 52, கடைசியாக வருகிறது.

இதே போல் வேறு பல வேடிக்கைகளையும் எண்களில் காணலாம். உங்களுக்கும் ஏதாவது தெரியுமானால் எனக்கு எழுதியனுப்புங்கள். இன்னும் கதைகள் பாட்டுக்கள் சித்திரங்கள் முதலியனவும் எழுதியனுப்பலாம். அவை இந்தப் பகுதியில் பிரசுரிக்கப்படும்.

சகோதரன் ஹரி.
'ஷாலிமர்'
தைக்காடு,
திருவனந்தபுரம்.

# வைஸ்ராய் சுற்றுப்பிரயாணம்:

★

## பத்திராதிபர்கள் விமானத்தை பார்வையிடுகின்றனர்.



வங்காளத்தில் நெல் வயலை வைஸ்ராய் சுற்றிப் பார்க்கிறார்.



(இடது)

இந்தியாவில் ஒரு இடத்தில் பத்திரிகை ஆசிரியர்கள் விமானங்களின் ஒத்திகையின்போது ஹரிக்கேன் விமானத்தில் ஏறி அதைப் பார்வையிட்டனர்.





யுத்தத்தில், கணவன் சேவைக்குப் புகழ்ந்து அளிக்கப்பட்ட பதக்கத்தை வைஸ்ராயிடமிருந்து பெறும் ஸ்திரீயும் குழந்தையும். இவர் ஸ்ரீமதி செல்லுராம். (வலது) பர்மா முனையில் "விக்டோரியா கிராஸ்" பரிசு பெற்ற இந்திய வீரர் காஜேகாலேக்கு வைஸ்ராய் அப்பதக்கத்தை அணிவிக்கிறார்.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Po
Press, Mount Road, Madras.—*Editor*: C. R. Srinivasan, B. A.